Regd. No.2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் - 340

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.



# SRI RAMANUJAN

Editor:

*Mahamahimopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. 25



பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஸ்ரீ எம்பெருமானார்
திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.



1976 அக்டோபர், நளஹு புரட்டாசிமீ

ஸ்ரீ ராமாநுஜன்-540



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 29 | நளவருஷ புரட்டாசி மாதம் 10—10—76 | ஸஞ்சிகை 4

# நிகழும் நளவருஷத்தின் நற்பணி யொன்று.

ஆண்டாளும் திருமங்கையாழ்வாரும் நளவருஷத்தில் திருவவதரித்தார்க ளென்பதை முன்னிதழில் தெரிவித்து, அதற்காகச் சில பணிகள் அறிவித்து "இவ்வளவில் த்ருப்திபெறுவோமல்லோம்; "மனோரதாநாம் அதடா: ப்ரவாஹா:" என்று முடித்திருந்தோம். அந்த மனோரதவெள்ளங்கள் நெஞ்சளவிலே நில்லாமல் கார்யபர்ய வஸாயியாயினவென்பதை மிக்க மகிழ்ச்சியோடு தெரிவிக்கிறோம்.



திருமங்கையாழ்வார்க்கு அஸாதாரணமான பெருமையொன்றுண்டு; (அதாவது)—"மாறன் பணித்த தமிழ்மறைக்கு–ஆறங்கங்கூற அவ தரித்தவரென்பது. நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந் தாதி, திருவாய்மொழி–ஆகிய இந்நான்கு திவ்ய ப்ரபந்தங்களும் சதுர்வேதஸாரங்களென்றும், அவற்றுக்கு அங்கங்களாகவே ஆறுதிவ்யப்பிர பந்தங்களைத் திருமங்கையாழ்வாரருளிச் செய் தாரென்றும் ஸம்பிரதாயம் வல்ல பெரியோர்கள் நிர்வஹித்துப்போருவது. அந்த ஆறு திவ்யப் பிரபந்தங்கள் எவையென்றால், பெரியதிரு மொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திரு மடல், திருநெடுந்தாண்டகம் என்னுமிவை. இவற்றுக்கு, வியாக்கியான சக்ரவர்த்தியான பெரியவாச்சான் பிள்ளையருளிச்செய்த வியாக்கி

யானங்களும் அவற்றைத்தழுவி நாம் எழுதி வெளியிட்ட திவ்யார்த்ததீபிகையுரையும் இருந்தாலும், அவை பலபல ஸம்புடங்களாயிருப்பதனாலும் விரிவுரைகளாயிருப்பதனாலும் இவ்வாறு திவ்யப்ரபந்தங்களும் ஒரே ஸம்புடத்தில் அடங்கியிருக்கும்படி ஒரு பதிப்புச் செய்யவேணுமென்று பலபெரியார்களின் நியமனத்தைச் சிரமேற்கொண்டு அவ்வாறே செய்துவருகிறோம். பெரிய திருமொழியும் திருத்தாண்டகங்களுமாகிற மூன்று திவ்வியப்பிரபந்தங்களுக்குப் பதவுரையும், (இயற்பாவைச் சேர்ந்த) மற்ற மூன்று திவ்யப்பிரபந்தங்களுக்குப் பதவுரை விசேஷவுரைகளுமாக இங்ஙனே அமைந்துள்ளது இப்பதிப்பு. துரிதமாகவே நடைபெற்றுவருமிப்பதிப்பு நாளைத் திருக்கார்த்திகைக்குள் முடிவுபெற்று, வீறுடைய *கார்த்திகையில் கார்த்திகைநாளாகிய அத்திருநன்னாளன்று அரங்கேற்றம் செய்யப்படவேணுமென்று உத்தேசித்திருப்பதைப் பேரருளாளனும், பேரருளாளன் பெருமை பேசக்கற்ற காமருசீர்க்கலியனும் தலைக்கட்டியருளவேணும்.

இப்பதிப்பு திருவல்லிக்கேணியில் ஸ்ரீபார்த்தஸாரதி யெம்பெருமான் திருவடி நிழலில் நடைபெற்று வருவதனால், மேதாவிமணியென்று நாம் விருதளிக்கப்பெற்ற ஆயுஷ்மான் M. A. ஸ்ரீ வேங்கடகிருஷ்ணன் இதில் பொறுப்பு வஹித்திருப்பது மகிழ்ச்சியுடன் குறிப்பிடப்படுகின்றது. ஐந்நூறு பிரதிகள்மட்டுமே இப்பதிப்பு அச்சிடலாகிறது. ஸ்ரீவைஷ்ணவர்களான எல்லாருடைய க்ருஹத்திலும் இப்புத்தகம் விளங்கவேணுமென்கிற ஆசையினால் அச்சுக்கூலி அச்சுத்தாள், பைண்டிங்—இச்செலவுகளைமட்டும் கணக்கிட்டுப் பார்த்ததில் முழுஸம்புடமாகிய புத்தகம் ஒன்றுக்கு 30/— முப்பதுரூபா விலை தேறுமென்று ஒருவாறு ஊஹிக்கப்பட்டிருக்கின்றது. முன்னடியாக 25/— இருபத்தைந்து ரூபா. செலுத்துமவர்களைப் போஷகராகக்கொண்டு, பதிப்பு முடிந்தவுடனே புத்தகத்தை அவர்களுக்கு வேறு செலவில்லாமல் சேர்ப்பிப்போம். அதிக அவகாசமில்லை. 6-12-76 உ திருக்கார்த்திகை.

**திருமங்கைமன்னன் திருவருளைக் கண்டுகொண்மின்**

இங்ஙனம் அடியேன்: P. B. A. (பத்ராதிபர்) 1—10—76

---

பிங்களவத்ஸர மங்களமாலிகா

# ஸ்ரீபாஷ்யார்த்த விசாரமொன்று.

[பராயத்தாதிகரணப்ரமேயநிஷ்கர்ஷம்]

சாரீரகமீமாம்ஸையில் கர்த்ரதிகரணமும் பராயத்தாதிகரணமும் சேர்ந்தாப்போலிருக்கிறது. முந்தின அதிகரணம் ஜீவாத்மாவைக் கர்த்தாவென்று நிலையிட்டது. பிந்தின அதிகரணம் அந்த சர்த்ருத்வம் பரமாத்மாயத்தமென்று அறுதியிட்டது. "ய ஆத்மநி திஷ்டந் ஆத்மநோந்தர: ஆத்மாநமந்தரோ யமயதி" "அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா" இத்யாதி ச்ருதிகளில் பரமாத்மாவானவன் ஜீவாத்மாவை அவ்வோகருமங்களில் ப்ரேரிப்பவனாகத் தெரியவருவதால் ஜீவாத்மாவுக்குச்சொன்ன கர்த்ருத்வம் பரமாத்மாவின் ப்ரேரணாதீனமென்று ஸித்தாந்திதமாயிற்று. இங்ஙனே கொண்டால் அதாவது—[ஜீவாத்மாவின் கர்த்ருத்வம்

பரமாத்மாதீனமென்று கொண்டால்] விதிநிஷேத சாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாக வேண்டிவருமே; நிக்ரஹாநுக்ரஹபாத்ரத்வம் ஜீவாத்மாவுக்கு இல்லையாகுமே! என்கிற ஆசங்கை நிற்கிறது. இதைப்பரிஹரிக்க ‡க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்த அவையர்த்த்யாதிப்ய:‡ என்று அடுத்த ஸூத்ரமவதரித்தது. ப்ரதம ப்ரவ்ருத்தியில் ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்த்ர்யமும் த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் மட்டுமே பரமாத்ம பாரதந்த்ர்யமும் கொள்ளப்படுகையாலே விதிநிஷேத சாஸ்த்ரங்களுக்கு வையர்த்த்யமில்லையென்று சங்காபரிஹாரம் செய்ததாயிற்று. ஆக சாரீரகமீமாம்ஸா நிஷ்கர்ஷம் எத்தகைத்தாக முடிந்ததென்னில்; பரமாத்மாவுக்கு ஸாக்ஷித்வம் அநுமந்த்ருத்வம் ப்ரேரகத்வம் என மூன்றுகாரங்களுண்டு. ஸாக்ஷித்வமென்பது உதாஸீநத்வம். ஜீவனுடைய ப்ரதம ப்ரவ்ருத்தியில் ஈச்வரனுக்கு ஔதாஸீந்யமேயுள்ளது. த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் அநுமந்த்ருத்வம். (அஃதில்லையாகில் ஜீவனுக்கு ப்ரவ்ருத்தியே நிர்வஹிக்கமாட்டாதன்றோ.) இனி ப்ரேரகத்வம் எந்த ஸ்தலத்திலென்றால், இதை நம் ஸ்ரீ பாஷ்யகாரர் ‡க்ருதப்ரயத்நாபேக்ஷஸ் து‡ இத்யாதி ஸூத்ரபாஷ்யத்தில்—"நைவேவம் ‡ஏஷஹ்யேவ ஸாது கர்ம காரயதி..." இத்யாதி ஸ்ரீஸூக்திகளால் ஒருங்கவிட்டு ஸர்வஸாதாரணமன்றிக்கே விசேஷ விஷயமென்று நிர்வஹிந்தருளினர். இந்த நிர்வாஹம் அநகமும் அநர்க்கமுமானது.

ஆக ஜீவனுடைய ப்ரவ்ருத்திகளில் ப்ரதம ப்ரவ்ருத்தியில் (ஈச்வரனுக்கு) ஔதாஸீந்யமென்றும் த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் அநுமந்த்ருத்வமென்றும் தேறி நின்றது. இதை நடாதூரம்மாள் தத்வஸாரத்தில் ‡ஆதாவீச்வர தத்தயைவ புருஷ: ஸ்வாதந்த்ர்ய சக்த்யா ஸ்வயம்..............தத்ரோபேக்ஷ்ய ததோநுமத்ய.... .........‡ இத்யாதி ச்லோகத்தாலே நன்கு விளங்கவைத்தார்.

அதிகரண ஸாராவளியில் பராயத்தாதிகரணார்த்த நிர்வாஹத்தில் (ச்லோ. 242) ‡க்ஷேத்ரஜ்ஞாநாம் ஸமாநா மித்யாதியில் சேதனனுடைய ஸகல ப்ரவ்ருத்திகளிலும் ஈச்வரனுக்கு ப்ரேரகத்வம் தாராளமாகவுண்டென்று கூறி, இது ஸ்ரீ பாஷ்ய தீப-ஸார-தத்வஸாரங்களோடு விரோதிக்குமது என்பதைத் தாமே தெரிந்து கொண்டு ‡பாஷ்யாதி க்ரந்தலேசோபி அவஹித மநஸாம ஐதமர்த்த்யம் பஜேத‡ என்று முடித்துவிட்டார்; ஸ்ரீ பாஷ்யாதிகளை நுட்பமாக ஊன்றி நோக்கினால் அவற்றுக்கு இதுவே அர்த்தமென்று தேறலாம்—என்று முடித்திட்டார். இதைப் பற்றிச் சில வருஷங்களுக்குமுன்பு ஸ்ரீமதுராந்தகம் ஸ்வாமியின் ஸம்ப்ரதாய ஸூதாவுக்கு மறுப்பாக நாமெழுதி வெளியிட்டிருந்த ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யத்திலுள்ள விரிவுகளை இங்கு விட்டிடுகிறோம். பிள்ளை லோகாசார்யரருளிச் செய்த தத்வத்ரயத்தின வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளின் விபுலநிரூபணங்களை மட்டும் இங்கு உதாஹரிக்கிறோம்.

தத்வத்ரயதநில் (35.) "கர்த்ருத்வந்தானீச்வராதீநம்" என்கிற சூர்ணையின் வியாக்கியானத்தில் விசதவாக்சிகாமணிகள் ஸ்ரீ பாஷ்யாதிபஹு ஸ்ரீஸூக்திகளை வெகுவிரிவாகஎடுத்துக்காட்டிஸமந்வயம்செய்தருளியிருக்கும்பரிசைக்காணவேணும்

**தத்வத்ரய வ்யாக்க்யாந ஸ்ரீஸூக்திகள் வருமாறு :—**

**‡பராத்து தச்ச்ருதே:‡ என்னும் வேதாந்த ஸூத்ரத்தாலே, ஆத்மாவினுடைய கர்த்ருத்வம் பராயத்தமென்று ஸித்தமாகச் சொல்லப்பட்டதிறே.**

சாஸ்த்ரார்த்தவத்த்வத்துக்காக கர்த்ருத்வம் ஆத்ம தர்மமென்று கொள்ள வேணும். அந்த கர்த்தாவுக்கு தர்மமான ஜ்ஞாந இச்சா ப்ரயத்நங்கள் பகவத் அதீநங்களா யிருக்கையாலும், அந்த ஜ்ஞாநாதிகள் பகவத் அநுமதியொழிய க்ரியாஹேதுவாக மாட்டாமையாலும், இவனுடைய கர்த்ருத்வம் ஈச்வராதீநம் என்கிறது. இவனுடைய புத்திமூலமான ப்ரயத்நத்தை அபேக்ஷித்து ஈச்வரன் அநுமதிதாநம் பண்ணுகையாலே, அந்த க்ரியா நிபந்தநமான புண்யபாபங்களும், சேதநனுக்கே ஆகிறது. இப்படி கர்த்ருத்வம் பரமாத்மாயத்தமானாலும் விதி நிஷேத வாக்யங்களுக்கு வையர்த்த்யம் வாராது: ஃக்ருதப்ரயத்நா பேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்த—அவையர்த்த்யாதிப்ய:ஃ என்று பரிஹரிக்கப்படுகையாலே. அதாவது—விஹிதப்ரதிஷித்தங்களுக்கு வையர்த்த்யாதிகள் வாராமைக்காக, இச் சேதநன் பண்ணின ப்ரதம ப்ரயத்நத்தை அபேக்ஷித்துக்கொண்டு ஈச்வரன் ப்ரவர்த்திப்பிக்கு மென்றபடி. எங்ஙனேயென்னில்: எல்லா சேதநருக்கும் ஜ்ஞாத்ருத்வம் ஸ்வபாவமாகையாலே, ஸாமாந்யேந ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி யோக்யத்வமுண்டாயேயிருக்கும்; இப்படியான ஸ்வரூபத்தை நிர்வஹிக்கைக்காக, ஈச்வரன் அந்தராத்மாவாய்க்கொண்டு நில்லா நிற்கும்; அவனாலே உண்டாக்கப் பட்ட ஸ்வரூபசக்தியை உடையனான சேதநன் அவ்வோ பதார்த்தங்களிலே உத்பந்ந ஜ்ஞாந சிகீர்ஷா ப்ரயத்நனாய்க்கொண்டு வர்த்தியா நிற்கும்: அவ்விடத் தில் மத்யஸ்தனாகையாலே உதாஸீநரைப்போலே யிருக்கிற பரமாத்மாவானவன் அந்த சேதநனுடைய பூர்வ வாஸநாநுரூபமான விதி நிஷேத ப்ரவ்ருத்தியிலே அநுமதியையும் அநாதரத்தையும் உடையவனாய்க்கொண்டு, விஹிதங்களிலே அநுக்ரஹத்தையும் நிஷித்தங்களிலே நிக்ரஹத்தையும் பண்ணாநிற்பானாய். அநுக்ரஹாத்மகமான புண்யத்துக்கு பலமான ஸுகத்தையும் நிக்ரஹாத்மக மான பாபத்துக்கு பலமான துக்கத்தையும் அவ்வோசேதநர்க்குக் கொடா நிற்கும். இது தன்னை அபியுக்தரும் சொன்னார். ஃஆத்மேச்வர தத்தயைவ புருஷஸ்ஸ்வாதந்த்ர்யசக்த்யா ஸ்வயம் தத்தத்ஜ்ஞாநசிகீர்ஷணப்ரயத்நாந் யுத்பாதயந் வர்த்ததே, தத்ரோபேக்ஷ்ய ததோநுமத்ய விததத் தந்நிக்ரஹாநுக்ரஹௌ தத்தத்கர்மபலம் ப்ரயச்சதி தத: ஸர்வஸ்ய பும்ஸோ ஹரி:ஃ என்று அடியிலே, ஸர்வநியந்தாவாய் ஸர்வாந்தராத்மாவான ஸர்வேச்வரன் தனக் குண்டாக்கிக்கொடுத்த ஜ்ஞாத்ருத்வரூபமான ஸ்வாதந்த்ரிய சக்தியாலே இப்புருஷன்தானே அவ்வோ விஷயங்களிலே ஜ்ஞாநசிகீர்ஷாப்ரயத்நங்களை யுண்டாக்கிக்கொண்டு வர்த்தியாநிற்கும்; அவ்விடத்தில் அசாஸ்த்ரீயங்களிலே உபேக்ஷித்தும், சாஸ்த்ரீயங்களிலே அநுமதி பண்ணியும், அவ்வோ விஷயங்களிலே நிக்ரஹாநுக்ரஹங்களைப் பண்ணாநின்றுகொண்டு, அவ்வோ கர்மபலத்தையும் ஸர்வேச்வரன் கொடா நிற்குமென்றார்கள். இப்படி ஸர்வப்ரவ்ருத்திகளிலும் சேதநனுடைய ப்ரதமப்ரயத்நத்தை அபேக்ஷித்துக்கொண்டு பரமாத்மா ப்ரவர்த் திப்பியா நிற்குமென்றதாய்த்து.

ஆனால், ஃஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி, தம் யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதி, ஏஷ ஏவாஸாது கர்ம காரயதி, தம் யமதோ நிநீஷதிஃ என்று, உந்நி நீஷையாலும், அதோநிநீஷையாலும், ஸர்வேச்வரன் தானே ஸாத்வஸாது கர்மங்

களைப் பண்ணுவியா நிற்குமென்கிற இது சேரும்படி என்? என்னில்; இது ஸர்வ ஸாதாரணமன்று, யாவனொருவன் பகவத் விஷயத்தில் அதிமாத்ரமான ஆநுகூல்யத்திலே வ்யவஸிதனாய்க்கொண்டு ப்ரவர்த்தியா நிற்கும்: அவனை அநுக்ரஹியா நின்றுகொண்டு, பகவான் தானே ஸ்வப்ராப்த்யுபாயங்களாய், அதிகல்யாணங்களான கர்மங்களிலே ருசியை ஜநிப்பிக்கும், யாவனொருவன் அதிமாத்ர ப்ராதிகூல்யத்திலே வ்யவஸிதனாய்க்கொண்டு ப்ரவர்த்தியா நிற்கும்; அவனை ஸ்வப்ராப்தி விரோதிகளாய், அதோகதி ஸாதநங்களான கர்மங்களிலே ஸங்கிப்பிக்கும் என்று, இந்த ச்ருதிவாக்யங்களுக்கு அர்த்தமாகையாலே. இதுதன்னை ஸர்வேச்வரன் தானே அருளிச்செய்தானிறே, ॐஅஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ் ஸர்வம் ப்ரவர்த்ததே. இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமந்விதா:ॐ என்று தொடங்கி ॐதேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம், ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே. தேஷாமேவாநுகம்பார்த்தம் அஹமஜ்ஞாநஜம் தம:, நாசயாம்யாத்மபாவஸ்த்தோ ஜ்ஞாநதீபேந பாஸ்வதாॐ என்றும், ॐஅஸத்யமப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீச்வரம்ॐ என்று தொடங்கி, ॐமாமாத்ம பரதேஹேஷு ப்ரத்விஷந்தோப்யஸூயகா:ॐ என்னுமதளவாக அவர்களுடைய ப்ராதிகூல்யாதிக்யத்தைச் சொல்லி, ॐதாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந், க்ஷிபாம்யஜஸ்ரமசுபா நாஸுரீஷ்வேவ யோநிஷுॐ என்றும் அருளிச்செய்கையாலே. ஆகையால், அநுமந்த்ருத்வமே ஸர்வஸாதாரணம்: ப்ரயோஜகத்வம் விசேஷ விஷயமென்று கொள்ளவேணும். ॐக்ருதப்ரயத்நாபேக்ஷஸ்துॐ என்கிற ஸூத்ரத்திலே இதெல்லாம் பாஷ்யகாரர் தாமே அருளிச்செய்தார். இவை எல்லாவற்றையும் திருவுள்ளம்பற்றியிறே (கர்த்ருத்வம் தான் ஈச்வராதீநம்) என்று அருளிச்செய்தது.

ஆக, கீழ்ச் செய்ததாயிற்று—ॐஜ்ஞாநாச்ரய மாகையாவது—ஜ்ஞாநத்துக்கு இருப்பிடமாயிருக்கைॐ என்று ப்ரதமத்திலே ஆத்மாவினுடைய ஜ்ஞாத்ருத்வத்தைச் சொல்லி, ஜ்ஞாந மாத்ரமென்பாரை நிராகரித்துக்கொண்டு, ஜ்ஞாத்ருத்வ கதநாநந்தரம் கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் சொல்லவேண்டுகையாலே அவை இரண்டும் ஜ்ஞாத்ருத்வ பலத்தாலே தன்னடையே வருமென்னுமிடத்தை தர்சிப்பித்து, குணங்களுக்கே கர்த்ருத்வமுள்ளது: ஆத்மாவுக்கு இல்லை என்பாரை நிராகரித்துக்கொண்டு, ஆத்மாவினுடைய கர்த்ருத்வத்தை ஸ்தாபித்து, அந்த கர்த்ருத்வத்தில் ஸ்வரூபப்ரயுக்தமல்லாத அம்சத்தையும், அதுதானிவனுக்கு வருகைக்கடியையும் சொல்லி, இப்படி ஆத்மாவுக்குண்டான கர்த்ருத்வம்தான் ஸர்வாவஸ்தையிலும் ஈச்வராதீநமாயிருக்குமென்று நிகமித்தாராயிற்று. ஆக இவ்வளவும் தத்வத்ரய வியாக்கியானத்தில் மாமுனிகளின் திவ்ய ஸூக்திகள்.

---

## போகத்தில்வழுவாத புதுவையர்கோன்.

திருப்பல்லாண்டின் நிகமனப் பாசுரத்திற்போல் பெரியாழ்வார்திருமொழியில் ஒவ்வொரு பதிகத்தின் நிகமனப் பாசுரத்திலும் பெரியாழ்வாருடைய ப்ரசம்ஸையுள்ளது. ஆண்டாளுடைய அருளிச்செயலான திருப்பாவை நாச்சியார்

திருமொழிகளிலும் நிகமனப் பாசுரங்களில் பெரியாழ்வாருடைய ப்ரசப்தியை ஆண்டாள் செய்திருக்கின்றாள். ஆண்டாள் தன்னுடைய பேற்றுக்குப் பெரியாழ்வார் வயிற்றில் பிறப்பையே மூலமாகக் கொண்டவளாதலால் அதனை நாச்சியார் திருமொழியில் ¤கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே¤ ¤வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அதுகாண்டுமே¤ என்கிற இரு பாசுரங்களில் பொறித்துவைத்தனள். இவள் திருத்தந்தையார் பக்கலில் ஆசார்ய ப்ரதிபத்தி கொண்டிருந்ததனாலே ஒவ்வொரு பதிகத்திலும் நிகமனப் பாசுரங்களில் பெரியாழ்வாரைமுன்னிட்டே தன்னைச் சொல்லிக்கொள்வதென்று விரதங்கொண்டாள். ¤விண்ணீல மேலாப்புப் பதிகத்தின் நிகமனப் பாசுரத்தில் பெரியாழ்வாரை நிர்தேசிக்கின்றவள் ¤போகத்தில் வழுவாத புதுவையர்கோன்¤ என்றருளிச்செய்தாள். பெரியாழ்வார் தமக்குத்தாமே யிட்டுக்கொள்ளுகிற விசேஷணங்களில் "வேதப்பயன் கொள்ளவல்ல" (விட்டு சித்தன்) என்பது முதலானவைகிடக்க, ஆண்டாளருளிச்செய்த "போகத்தில் வழுவாத" என்னுமிவ்விசேஷணம் அற்புதமானது. போகமாவது பகவதநுபவம். அதனை வழுவாமற்செய்தவர் உண்மையிற் பெரியாழ்வாரொருவரே. திருவாய்மொழியில் (6-6.) ¤மாலுக்கு வையம் பதிகத்திற்குப் பயனுரைக்குமிடத்து "இப்பத்தும் வல்லவர், கட்டெழில் வானவர் போகமுண்பாரே" என்றார் நம்மாழ்வார். பெரியாழ்வாருடைய போகத்திற்கும் நித்யஸூரிகளின் போகத்திற்கும் பர்வதபரமாணுவோட்டை வாசியோருமே பெரியாழ்வாருடைய போகம் க்ருஷ்ணாவதார சேஷ்டிதபோகம். பராசரபாராசர்யாதிகளும் க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களைப் பேசியிருந்தாலும் அவர்கள் ஏதோ கதை சொன்னவர்களேயொழிய அநுபவித்தவர்களல்லர்; லவலேசமும் அநுபவித்தவர்களல்லர். பெரியாழ்வார் இருநூற்றறுபது பாசுரங்களினால் ஸ்ரீக்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களை யநுபவித்திருக்குமழகு வாசாமகோசரமென்றல்லது வேறு என்ன சொல்ல இயலும்? ¤வண்ணமாடங்கள் சூழ் திருக்கோட்டியூர்க் கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்¤ என்று தொடங்கிக் கதைசொல்லுபவராகச் சொல்லிக்கொண்டு போந்தவர் ¤கிடக்கில் தொட்டில்கிழியவுதைத்திடும், எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும், ஒடுக்கிப் புல்கில் உதரத்தே பாய்ந்திடும் மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன் நங்காய்¤ (9) என்றொரு பாசுரம் பாடினர். இங்கு நானென்பதற்கு யசோதையென்றல்லவோ அர்த்தம். இப்படி யசோதை சொன்னாளென்று சொல்லாமே தாமேயன்றோ யசோதையாக வடிவுகொண்டார். யசோதாபாவம் மெய்யே உண்டாயிற்றில்லையாகில் ¤பெருநீர்த்திஸர பெழுகங்கையிலும் பெரியதோர் தீர்த்தபலந்தருநீர், சிறுச்சண்ணந் துள்ளஞ்சோரத் தனர்நடை நடவானோ¤ ¤சொட்டுச்சொட்டென்னத் துளிக்கத் துளிக்க என் குட்டன் வந்தென்னைப் புறம்புல்குவான்¤ என்கிற பாசுரங்கள் இந்த ரீதியில் அவதரித்திருக்கமாட்டாவே.

க்ருஷ்ணாவதார விஷயத்தில் மஹர்ஷிகளின் வாக்குகளெல்லாங் கூடினாலும் இவ்வாழ்வாருடைய 'வெண்ணெய்விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டு'

[இதன் தொடர்ச்சியை-பக்கம் 21ல் காண்க.]

## ஸ்ரீவசந பூஷண ஸ்ரீஸூக்தியநுபவம்

மணவாள மாமுனிகள் உபதேச ரத்தினமாலையில் சில ஆழ்வார்களுக்கு ஒரே பாசுரம், சில ஆழ்வார்களுக்கு இரண்டு பாசுரம்............ என்றிப்படி வாசிவைத்துப் பாசுரம் பாடியுள்ளார். திருமழிசையாழ்வார், குலசேகராழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார் இவர்களுக்கு ஒவ்வொரு பாசுரம், முதலாழ்வார்கள், திருமங்கை மன்னன், நம்மாழ்வார், மதுரகவிகள் இவர்களுக்கு இரண்டிரண்டு பாசுரம், ஆண்டாள் எம்பெருமானார் இவர்களுக்கு மும்மூன்று பாசுரம். பெரியாழ்வார்க்கு ஐந்து பாசுரங்கள், ஆக இவ்வண்ண மருளிச்செய்து வந்தவர் பிள்ளை லோகாசாரியர்க்கு ஸ்ரீவசநபூஷணத்தை மட்டுமுத்தேசித்து ஏழு பாசுரங்களருளிச்செய்தார். இதனால் மணவாள மாமுனிகள் மிகச் சிறந்த சாஸ்த்ரமென்று திருவுள்ளம் பற்றியது ஸ்ரீவசநபூஷண மொன்றே யென்று தேறும். அந்த திவ்ய சாஸ்த்ரத்தின் பெருமை ஏழு பாசுரங்களினால் விளக்கப்பட்டாலும் அவற்றுள் ஒரு பாசுரம் லோகோத்தரமாக அமைந்துள்ளது. அதாவது,

> "ஆர்வசன பூடணத்தி னாழ்பொருளெல்லா மறிவார்
> ஆரது சொல் நேரிலனுட்டிப்பார்—ஓரொருவர்
> உண்டாகி லத்தனைகாணுள்ளமே, எல்லார்க்கு
> மண்டாததன்றோவது" என்பதாம்.

இதில், ஸ்ரீவசநபூஷணத்தின் கம்பீரமான பொருள்களை யெல்லாம் அறிய வல்லாரில்லை யென்று முதலடியில் அருளிச்செய்தார்; "விசதவாக் சிகாமணியான ஸ்வாமியின் திவ்யமான வியாக்கியானம் திருவவதரித்திருக்க அது கொண்டு ஆழ்பொருள்களையறிய என்னகுறை?" என்று சிலர் விஜ்ஞாபிக்க, உடனே "ஆர் அது சொன்னேரி லனுட்டிப்பார்" என்றார்; ஒருவாறு பொருள் தெரிந்து கொள்ளலாமானாலும் அந்த ஸ்ரீவசந பூஷணசாஸ்த்ரமிட்ட கட்டளையிலே அநுஷ்டிக்கவல்லார் ஒருவருமில்லையே! என்றாராயிற்று. ஒருவராலும் அனுஷ்டிக்க முடியாத விஷயம் ஸ்ரீவசநபூஷணத்தில் என்னவுள்ள தென்று பலரும் கேட்கக் கூடும். சிலவற்றை யெடுத்துக் கூறுகின்றோமிங்கு. "ப்ரபந்நனுக்கு விஹித விஷய நிவ்ருத்தி தன்னேற்றம்" என்று அந்த திவ்ய சாஸ்திரத்தில் இரண்டு மூன்றிடங்களில் அருளிச் செய்யப்படுவதால் இதுதான் அநுஷ்டிக்க முடியாத விஷயமென்று சிலர் நினைபபர்கள், சொல்லுவார்கள். இதுவன்று முக்கியமானது. "குற்றம் செய்தவர்கள் பக்கல்" என்று தொடங்கி ஒரு சூர்ணையுள்ளது; அதாவது, (365)

> "குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும்
> உகப்பும் உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்" என்பது.

அபராதப் பட்டவர்களுக்கு அபராதத்திற்குத் தக்கபடி தம்மாலியன்றவளவு தண்டனைசெய்ய வேண்டியதுதான் தக்கது என்று நம்மைப்போன்ற அவிவேகிகளின் நினைவு. மஹாவிவேகிகளோ வென்னில், அப்படி நினையார்கள். அந்தக் குற்றவாளர்களிடத்திலே க்ஷமை, க்ருபை முதலானவற்றையே காட்டுவார்கள். பொறுமை காட்டவேணும், க்ருபைபண்ணவேணும். சிரிக்கவேணும், உகக்கவேணும், நன்றிபாராட்ட வேணும் என்று ஐந்து விஷயங்கள் இங்குச் சொல்லப்படுகின்றன. ஸ்ரீவசந பூஷணத்திற்கு ஜநந்யாசார்யருடைய வியாக்கியானமொன்று இருந்தாலும் அதனால் ஓரிடத்திலும் ஒரு த்ருப்தியுமுண்டாவதில்லை. அக்குறைதீரவே அற்புதமான வியாக்கியானம் விசதவாக் சிகாமணிகளான மணவாளமாமுனிகள் இட்டருளினது." அந்த வியாக்

யொனத்தை யடியொற்றி விவரணம் காட்டப்படுகிறது. "குற்றம் செய்தவர்களிடத்தில் பொறுமை காட்டவேணும்." அதாவது எதிரிகள் செய்யும் தூஷணை முதலான குற்றத்திற்காகச் சிலர் உடனே பதில் தண்டனை செய்யக்கூடும்; அது செய்ய சக்தியற்றவர்கள் 'இந்த மஹாபாபி இப்படி அபராதப் பட்டானே!' என்று நெஞ்சு புண்பட்டிருக்கக் கூடும். இவ்விரண்டு படியு மின்றிக்கே அவர்கள் பட்ட அபராதத்தை ஸஹித்திருக்க வேணும். ப்ரதிக்ரியை பண்ண நினையா மலும் நெஞ்சு கன்றுமலு மிருக்கவேணுமென்கை.

"குற்றம் செய்தவர்களிடத்தில் க்ருபை காட்டவேணும்."—அதாவது, கீழ்ச்சொன்னபடி. ஸாத்விகரானவிவர் ஸஹித்துக் கொண்டிருந்தாலும் 'அரசன் அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும்' என்கிறபடியே தெய்வம் தண்டித்தே தீருமன்றோ; அதில் ஸந்தேஹமில்லையே, நாஸ்திகர்களுக்கு இதில் விப்ரதிபத்தியிருந்தாலும் ஆஸ்திகர்கள் இதைத் திண்ணமாக எண்ணி யிருப்பர்களே. அதனால் 'ஐயோ! நாம் பொறுத்திருந்தாலும், பொறுத்திருக்கமாட்டாத தெய்வம் இவன் தலையில் இடிவிழுந்தாற் போலே அனர்த்தங்கள் விளையும்படி செய்யுமே; இதற்கு என்ன பண்ணுவோம்!' என்று இரக்கங் கொண்டிருக்கவேணுமென்கை. இங்கே மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி;—"நாம் பொறுத்திருந்தோமாகிலும் எம்பெருமான் உசித தண்டம் பண்ணவன்றோ புகுகிறான், ஐயோ! இனி இதுக்கு என் செய்வோம்! என்கிற பரது:க்காஸ ஹிஷ்ணுத்வம்" என்பதாம்.

"குற்றம் செய்தவர்களிடத்தில் சிரிப்பு காட்டவேணும்"—இது வெகு ஆச்சரியமான ஸ்ரீஸூக்தி. எதற்காகச் சிரிக்கவேணும்? என்ன வென்று சிரிக்கவேணும்? என்று கேட்டால், குற்றங்களே வடிவெடுத்த இப்படுபாவி வெட்கமில்லாமல் பிறரை தூஷிக்கப் புறப்படுகிறானேயென்று சிரிக்கவேணுமென்பர் சிலர்; ஐநந்யாசார்யரும் தமது வியாக்கியா னத்தில் இங்கு ஏதோ எழுதி வைத்திருக்கிறார்: இங்கு மணவாளமாமுனிகளின் அற்புதமான திவ்யஸூக்தி காணீர்:—

"அத்ருஷ்ட விரோதமாக இவர்களால் செய்யலாவதொன்றில்லையிறே: பாருஷ்யாதி முகத்தாலே விரோதங்களிறே இவர்களால் செய்யலாவது; அப்படி சிலவற்றைச் செய்தால் அவைதங்களோபாதி நாமும் இவற்றிலே சபலராய் இவற்றினுடைய ஹாநியைப் பற்ற நெஞ்சாறல் பட்டுத் தளர்வுதோமென்றிருந்தார்களன்றோ; இவர்களின் அறிவிலித்தன மிருந்த படி என்! என்று பண்ணும் ஹாஸம்." என்று.

இந்த ஸ்ரீஸூக்தியின் மாதுர்யத்தையும் காம்பீர்யத்தையும் யாரே காணவல்லார்? மூல வக்தாவான பிள்ளை லோகாசார்யருடைய திருவுள்ளக் கருத்தை அப்படியே அந்யூந அநதிரிக்த மாகவன்றோ காட்டியுள்ளார். இதைச் சிறிது விவரிப்போம். தூஷிப்பவர்கள் என்ன கருத்தினாலே தூஷிக்கிறார்களென்று பார்க்கவேணும். எந்த வ்யக்தியை தூஷிக்கிறார்களோ அந்த வியக்திக்குச் சில நஷ்டங்களை யுண்டுபண்ண வேணுமென்கிற எண்ணங்கொண்டே தூஷிக்கிறார் களென்பதில் ஸந்தேஹமில்லை. உலகில் நஷ்டம் இருவகைப்படும்; (1) அத்ருஷ்டத்தில் நஷ்டம்; (2) த்ருஷ்டத்தில் நஷ்டம். ஆமுஷ்மிக புருஷார்த்தத்தில் கெடுதி விளைவது அத்ருஷ்டத்தில் நஷ்டமெனப்படும். ஐஹிக புருஷார்த்தத்தில் கெடுதி விளைவது த்ருஷ்டத்தில் நஷ்டமெனப்படும். அதாவது, யாரேனுஞ் சிலர் நம்மிடத்தில் கௌரவம் வைத்திருந்தால் அது மாறும்படியாகச் செய்வதும், யாரேனும் நமக்கு ஸன்மானங்கள் செய்வதாயிருந்தால் (அல்லது) செய்துகொண் டிருந்தால் அதைத் தவிர்ப்பதுமன்றோ த்ருஷ்டத்தில் நஷ்டமாவது. ஆக இப்படிப்பட்ட நஷ்டங் களில் இந்த தூஷகர்களின் தூஷணங்களினால் அத்ருஷ்டத்தில் நஷ்டம் சிறிதுமுண்டாகா தென்பது திண்ணம். ஆனால் த்ருஷ்டத்தில் நஷ்டம் உண்டுபண்ண முடியுமென்று வைத்துக்கொண்

வோம். அதாவது, பலர் திரண்டிருக்கு மிடங்களில் நிஷ்காரணமாகவோ ஸகாரணமாகவோ பருஷோக்திகளை வாரியிறைத்து தூஷிப்பதனால் தூஷிக்கப்பட்ட வ்யக்தி விசேஷத்தினிடத்தில் உலகர் வைத்திருக்கிற மதிப்பு குறையக் கூடும். அவர்கள் செய்ய நினைத்திருக்கிற (அல்லது) செய்து கொண்டுவருகிற ஸன்மானங்களும் தொலையக்கூடும். ஆக இப்படிப்பட்ட த்ருஷ்ட நஷ்டங்கள் உண்டாகக் கூடுமென்று வைத்துக்கொள்வோம். இது தவிர வேறு விதமான நஷ்டம் ப்ராக்ருதர்களின் தூஷணைகளினால் உண்டுபண்ண முடியாதென்பது திண்ணம். இப்படியாக இவர்களுண்டாக்கும் நஷ்டத்தினால் நாம் கஷ்டப்படுவோமென்றல்லவா இந்த தூஷகர்களின் நினைவு; அந்தோ! இவர்கள் நம்மையும் தங்களைப்போல நினைத்துவிட்டார்களே! ப்ராக்ருதர் களால் வரும் மதிப்பும் ஸத்காரமும் நமக்கு த்ருணப்ராய மென்பதை இந்த அவிவேகிகள் தெரிந்து கொள்ளவில்லையே, ப்ராக்ருதர்களின் இகழ்வும் வெறுப்பும் அதிகரிக்க அதிகரிக்க அதையே நாம் மிகுந்த ச்ரேயஸ்ஸாகக் கொண்டிருக்கிறோமென்பதை இந்த அறிவிலிகள் அறிந்து கொள்ள வில்லையே! * உண்டியே உடையே உகந்தோடுமிம் மண்டலத்தொடுங் கூடுவதில்லை யான் * என்கிற நம்முடைய வுறுதி திடமாவதற்கே இவர்களுடைய தூஷணைகள் ஹேதுவாவதை இந்த ஜடங்கள் தெரிந்து கொள்ளவில்லையே! என்று சொல்லிச் சொல்லிச் சிரிக்க வேணும்— என்பதே மாமுனிகளின் திவ்யஸூக்தி தாத்பர்யம். உண்மையில், நிந்திப்பவர்கள் விஷயத்திலே இப்படிச் சிரித்திருப்பதொன்றுதான் முக்கியமானது. ஆகவே தான் பொறை முதலிய ஐந்தில் இது இடையில் வைக்கப்பட்டது.

குற்றம் செய்தவர்களிடத்தில் உகப்பு நடக்கவேணும். (அதாவது) தூஷிக்கு மவர்கள் பண்ணும் பரிபவம் சரீரத்தைச் சேருமேயொழிய ஆத்மாவைச் சேராது. ஸர்வ ப்ரகாரத்தாலும் உஜ்ஜீவித்து வாழ்ந்து போந்த ஆத்மா இவர்கள் பண்ணும் பரிபவத்திற்கு இலக்காகக் கூடியதன்றே; பாழும் சரீரந்தானே இவர்கள் பண்ணும் பரிபவத்திற்கு இலக் காமது. அந்த சரீரத்தை தத்வஜ்ஞானிகள் தங்களுக்கு சத்ருவாகவன்றோ நினைத்திருப்பார்கள், இந்த ஸ்ரீவசநபூஷணத்திலேயே இரண்டாம் பிரகரணத்தின் முடிவு சூர்ணையிலே "இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் நாசஹேதுவான அஹங்காரத்துக்கும் அதினுடைய கார்யமான விஷய ப்ராவண்யத்துக்கும் விளை நிலம் தானாகையாலே தன்னைக் கண்டால் சத்ருவைக் கண்டாற் போலே" என்றருளிச் செய்யப் பட்டிருக்கையாலே தன்னுடைய சரீரம் தனக்கு சத்ருவென்பதில் ஸந்தேஹமில்லை, உலகில் தன்னுடைய சத்ருவுக்கு ஒருவன் பரிபவத்தை யுண்டுபண்ணில் உகப்பு உண்டாகுமன்றோ. அதுபோலவே ஸ்வசத்ருவான ஸ்வசரீரத்தை நிந்தை முதலியவற்றால் பரிபவப் படுத்துமவர்கள்திறத்திலே உகப்பு உண்டாகவேணுமென்கை. மேலும், தூஷிக்கு மவர்கள் தங்களுடைய தூஷணைகளாலே த்ருஷ்டத்தில் சில நஷ்டங்களைத்தான் உண்டு பண்ண முடியுமென்று கீழே விவரிக்கப்பட்டது. அப்படி நஷ்டம் செய்யப் பெறுகிற லௌகிகப் பொருள்களை தத்வஜ்ஞானிகள் தமக்கு மிகவும் பிரதிகூலங்களாக நினைத்திருக்கையாலே அப்படிப் பட்ட பிரதிகூலங்களைப் போக்குமவர்கள் விஷயத்திலே உகப்பு காட்ட வேண்டியது அவசிய மேயன்றோ.

குற்றம் செய்தவர்களிடத்தில் உபகார ஸ்மிருதி நடக்கவேணும். = பகவத் பாகவத ஸந்நிதானங்களில் நாம் செய்யவேண்டிய காரியம் என்ன? * அமர்யாத: க்ஷுத்ர: சலமதி ரஸூயா ப்ரஸவபூ: * இத்தியாதிப்படியே நம்முடைய தோஷங்களை யநுஸந்திப்பதுதான் செய்ய வண்டிய காரியம். இதை நாம் மறந்திருக்கும் ஸமயங்களிலே நம்முடைய தோஷங்களை [ஸ்வகீய பருஷோக்தி முகத்தாலே] உணர்த்துகிறவர்களை நமக்கு உபகாரிகளாகவன்றோ நாம் நினைக்க வேண்டும். இப்படி தோஷங்களை யுணர்த்துவது ஏகாந்தமாக வல்லாமல் மிகப்பெரிய கோஷ்டி களிலே பலரறிய வுணர்த்துவது ஸாமாந்யமான உபகாரமா? மஹோபகார மல்லவா? அன்னவர் களிடத்திலே நன்றி பாராட்ட வேண்டுவது நமது கடமையன்றோ.

ஆக இங்ஙனே விவரிப்பதற்கு உரிய ஸ்ரீவசநபூஷண சூர்ணையினால் தெரிவிக்கப் பட்டுள்ள விஷயம் ஒருவராலும் அனுட்டிக்க முடியாததென்பதில் ஐயமில்லை. குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறை முதலிய ஐந்து விதமான சித்தவ்ருத்திகள் உண்டாகவேணுமென்றன்றோ அருளிச் செய்யப்பட்டிருக்கின்றது. ஐந்தில் ஒன்றாவது உண்டாகக்கூடியதா வென்று பார்ப்போமாயின் ஒன்று கூட வுண்டாகமாட்டாதென்று திடமாகச் சொல்லலாம். இந்தவொரு சூர்ணையை நாம் பல்காலும் மனனம் செய்யவேண்டும். இதில் சொல்லியபடி நமக்கு விசேஷணமான சித்த வ்ருத்தி விளையவேணுமென்று மனப்பூர்வமாக ஆசாரியர் திருவடிகளில் பிரார்த்திக்கவேண்டும்.

# அருளிச் செயற் பகுதி



## "கள்ளவேடத்தைக் கொண்டுபோய்ப் புரம்புக்கவாறும்"

திருவாய்மொழி ஐந்தாம்பத்தில் பத்தாம் பதிகத்தில் நான்காவது பாட்டின் தொடக்கமிது. இதில் முன்னடிகளில் புத்தாவதார கதை கூறப்படுகின்றது. காட்டுக் கெழுந்தருளின சக்ரவர்த்தி திருமகனாரை மீண்டும் திருவயோத்திக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருவதற்காகச் சித்திரகூடஞ் சென்ற பரதாழ்வானோடு உடன் சென்றவர்களில் ஜாபாலியென்ற ப்ராஹ்மணோத்தமரும் ஒருவரென்பது தெரிந்ததே. அந்த ஜாபாலியானவர் பரதாழ்வானுடைய வேண்டுகோளை நிறைவேற்றும் பொருட்டு அசாஸ்த்ரீயங்களான வாதங்களையும் செய்யத் தொடங்கினர். பௌத்தமத் ப்ரக்ரியையில் தோன்றின அவரது பேச்சுக்களைக் கேட்டு ஸஹித்திருக்கமாட்டாத பெருமாள் "யதா ஹி சோரஸ் ஸ ததா ஹி புத்த:" என்றார். புத்ததேவதை கள்ளத்தெய்வங்காணும் என்றபடி. ஆழ்வார் அந்த ராமசந்த்ரோக்தியை யடியொற்றியே* கள்ளவேடத்தைக் கொண்டுபோய்* என்றருளிச் செய்தார்.

கள்ளவேடங்கொண்ட புத்த முனியின் கதை கேளீர். தைத்திரீய யஜுஸ் ஸம்ஹிதையில் ஆறாவது காண்டம் இரண்டாவது பிரச்னத்தில் "தேஷாம் அஸுராணாம் திஸ்ர: புர ஆஸந் அயஸ்மய்யவமா அத ரஜதா அத ஹரிணீ தா தேவா ஜேதும் நாசக்நுவந்" என்று தொடங்கி—முப்புரங்கள் பெற்ற மூன்றஸுரர்கள் தேவர்களால் வெல்ல முடியாத வர்களாயிருந்தனர் என்று கூறப்பட்டது. அதற்கு மேற்பட்ட கதாஸந்தர்ப்பம் புராண ப்ரஸித்தமாய் விளங்காநின்றது. அசுரர்கள் கோரமான தவம்புரிந்து உருத்திரக் கடவுளை உகப்பித்து லோகவிலக்ஷணங்களான மூன்று பட்டணங்களைப் பெற்றுப் பொறுக்க வொண்ணாத தீம்புகளைச் செய்துகொண்டிருந்தார்கள். அவர்களை எவ்விதத்திலும் கொல்ல முடியாமலேயிருந்தது. பிறகு தேவர்களனைவரும் சங்கசக்ரகதாபாணியான திருமாலைச் சரணமடைந்து அவ்வசுரர்களை வதைக்குமுபாயத்தைத் தெரிவிக்குமாறு வேண்டினார்கள். அவ்வசுரர்கள் வைதிக தருமங்களை யனுட்டிப்பதில் ஊக்கமுடையராயிருக்கின்றனரென்றும் அதுபற்றியே அவர்கள் வெல்லமுடியாதவர்களா யிருக்கின்றனரென்றும் உண்மையை யுரைத்தார்கள் தேவர்கள். அது கேட்ட திருமால் தம்முடைய திருமேனியினின்று மாயா மோஹ ரூபமொன்றையுண்டாக்கி அதைத் தேவர்களிடம் தந்து "இந்த மாயாமோஹம் மாயாவாதங்களினால் அசுரர்களை மயக்கவல்லது. இதனால் அவ்வசுரர்கள் வேதமார்க்க பஹிர்ப்பூதர்களாகி எளிதில் வதைக்கப்படுவர்கள்; போங்கள்" என்று விடை கொடுத்

தருளினர் (திருமால்). பிறகு ஸந்துஷ்டசித்தர்களாய்ப் புறப்பட்ட தேவர்களோடு கூடச்சென்ற மாயாமோஹன் நருமதாநதியின் கரையில் பலவகைப்பட்ட வைதிககருமங்களை யனுட்டித்துக் கொண்டிரா நின்ற அவ்வசுரர்களின் எதிரே திகம்பரமாய் முண்டமாய் மயில் தோகையைக் கையில் கொண்டதாய்த் தன்னுருவத்தைக் காட்டி நின்று, அவர்களுக்கு தருமத்தில் வைமுக்கியமும் அதர்மத்தில் ஆபிமுக்கியமும் உண்டாகும்படியான கூடயுக்திவாதங்களை அதிகமாகப் பேச, அவர்கள் மோஹிதர்களாய் வைதிக கருமங்களையெல்லாம் விட்டொழித்து வேதங்களை நிந்திக்கவும் புகுந்தனர். பிறகு அவர்களை வதைப்பது அமரர்களுக்கு எளிதாயிற்று— என்னுமிக்கதை புராணரத்னமான ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் மூன்றும் அம்சத்தில் பதினேழா மத்யாயத்தில் விரித்துரைக்கப் பட்டுள்ளது. இந்த மாயாமோஹனுக்கே புத்ததேவதையென்று மறுபெயர், இவன் பேசின மாயாவாதங்கள் அவ்விடத்திலேயே பதினெட்டாமத்யாயத்தில் பரக்கக் காணத்தக்கவை.

பகவான் தர்மஸம்ஸ்தாபனத்திற்காகத் திருவவதரிப்பவனாயிருந்துவைத்து, தர்ம மார்க்க நிஷ்ணாதர்களுக்கு இப்படி தருமருசியைக் குலைக்கலாமா? என்று கேள்வியுண்டா மளவில் மேலையார் இங்கு ஸமாதானமாகக் கூறுவது, அஸதாம் தர்மபுத்திச் சேத் ஸதாம் ஸந்தாபகாரணம், உபோஷிதஸ்ய வ்யாக்ரஸ்ய பாரணம் பசுமாரணம்:'' என்பதேயாம். இந்த சுலோகம் ஏற்கனவேவிவரிக்கப்பட்டது காண்க. ...

## (2) 'அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்'

திருப்பாணாழ்வார் அருளிச்செய்த ✻அமலனாதிபிரான் தொடக்கத்தில் "அடியார்க்கு என்னை யாட்படுத்த விமலன்'' என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இதனால் ஆழ்வார் தமக்கு பாகவத சேஷத்வம் ஸித்தித்தாக அநுஸந்தானம் செய்துகொண்டபடி. இவருடைய கதையோ இதற்கு நேர்மாறாகக் காண்கிறது, இவர்க்கு முனிவாஹன ரென்று திருநாமம். * ஆபாதசூட மநுபூய * என்கிற தனியனில் * மநஸ்வமுநிவாஹநம * தம் * என்றுள்ளது ப்ரஸித்தம். லோகஸாரங்க மஹா முனிகளின் தோளின்மேலேறி வீற்றிருந்தவர் இவ்வாழ்வார் என்பது இவருடைய சரித்திரத்தில் விசதம். அதுபற்றியே மூநிவாஹனரென்று திருநாமமாயிற்று. இவரோ ஜகந்ய ஜாதீயர். அவரோ உத்தம ஜாதீயரும் உத்தமாச்ரமியுமானவர், அப்படிப் பட்ட மஹா புருஷரை இவர் தோளிலேற்றிக் கொண்டு நடந்தாராகில் அடியார்க்கு ஆட்பட்டவராவர். அவர் தோளின் மேலே இவர்தாம் ஏறி வீற்றிருந்து [தம்முடையசேஷித் வத்தைக் காட்டிக்கொண்டிருந்து] பாகவத சேஷத்வம் தமக்கு ஸித்தித்ததாகச் சொல்வது எங்ஙனே பொருந்தும்? என்று சங்கிக்க நேர்கின்றது.

இங்கு நம் ஆசாரியர்கள் தெளிவு பெறுத்துவது எங்ஙனேயென்னில்: சேஷத்வத்திற் காட்டிலும் மிகச்சிறந்தது பாரதந்த்ரியம். அந்த பாரதந்திரியம் தமக்கு நன்கு ஸித்தித்தபடி யாலே அதையிட்டு ''அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்'' என்னக்குறையில்லை— என்பதாக.

இதனைச் சிறிது விவரிப்போம். லோகஸாரங்க மஹாமுனிகள் திருப்பாண் பெருமாள் பக்கலில் முந்துற அபசாரப்பட்டு பிறகு எம்பெருமானருளால் மனம் திருந்தி அவரைத் தோளில் தூக்கிக்கொண்டு போக நிச்சயித்தபோது பாண்பெருமாள் இதற்கு நாம் இசைவது ஸ்வரூபவிருத்தமென்று இருய்த்திருந்தும் முடிவில் முனிகளின் தோளின் மேல் ஏறி உட்கார்ந்துகொண்டே திருமஞ்சனக் காவேரியிலிருந்து அரங்கன் ஸன்னிதானத் தளவும் சென்றிருக்கிறார். இது சேஷத்வவிருத்தமான நிகழ்ச்சியென்று பலரும் பழிக்கக்

கூடுமென்று தோன்றவே அங்ஙனம் பழி விளையாமைக்காக * அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன் * என்று உபக்ரமித்தார். இதன் கருத்து என்னவென்றால், அடியேன் என் செய்வேன்! எம்பெருமான் எனக்கு ஸ்வசேஷத்வத்தை உணர்த்துவதற்கு முன்னே பாகவதசேஷத்வத்தை யுணர்த்திவைத்தான்; அதிலும் சேஷத்வத்தளவிலே நில்லாமல் பாரதந்திரிய பர்யந்தமாக உணர்த்திவைத்தான். பாரதந்த்ர்யமென்பது க்ரியாபர்யவஸாயி யாலுலொழிய ஸ்வரூபஸித்திபெற வழியில்லை. 'என் தோளின்மேல் ஏறு' என்று அவர் சொல்ல அதற்கு நான் இசையாதே இருந்தேனாகில் சேஷத்வகாஷ்டை பழுதாகுமே. அடியார்க்கென்னை யாட்படுத்தினபடியால்தான் நான் பெரியார் தோளிலே ஏறி உட்கார நேர்ந்தது—என்பதே இங்கு விவக்ஷிதம்.

இவ்விடத்தை வியாக்கியானித்தருளாநின்ற பெரியவாச்சான் பிள்ளை "தான் சேஷித்வத்தினுடைய எல்லையிலே நின்றாப் போலே சேஷத்வத்தினெல்லையிலே என்னை வைத்தான்" என்றருளிச் செய்ததை அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தம்முடைய வியாக்கியானத்திலே விவரித்தருளுகிறார்—"தம்மை வஹித்தவளவில் தாம் சேஷபூத ரானபடி யென்னென்னில்! திருத்துழாய் திருவபிஷேகத்திலே யிருந்ததென்று சேஷத்வம் குலையாதே" என்று. *தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மானை எம்பெருமான் திருத்துழாயைத் தோளில் கொள்வதோடு தாளில் கொள்வதோடு வாசியில்லையே. அசித்வத் பாரதந்த்ர்ய மன்றோ நமக்கு ஸ்வரூபம்; முனிகளின் ஆணையை மீறினோமாகில் நம் பாரதந்த்ரியம் பாழாய்ப் போகுமத் தனையன்றோ என்றாயிற்று பாண்பெருமாள் பாவித்தது.

சித்திரகூடத்திலிருந்து மீளும் பரதாழ்வானைப்பற்றி *ஸ காமம் அநவாப்யைவ* என்னச் செய்தேயும் * ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:* என்றும் சொல்லிற்று. மனோரதம் நிறைவேறப் பெறாதவனுக்கு ஹர்ஷம் எங்ஙனே கூடுமென்று கேள்விவரும். இளைய பெருமாளுக்கு ஸித்திக்காத பாரதந்த்ர்யம் நமக்கு ஸித்தித்ததேயென்று ஹ்ருஷ்டனானான் பரதாழ்வான். பெருமாள் நில் என்ன, நிற்கமாட்டேனென்ற இளையோனுக்குப் பாரதந்திரியம் ஸித்திக்க வழியில்லையாயிற்று. அந்த அபக்யாதி நமக்கில்லையேயென்று பரதாழ்வானுக்கு ஹர்ஷம். இத்தகைய சுவைமிக்க விஷயங்கள் பரிமளிக்கும்படியமைத்தன பூர்வாசார்ய வியக்கியானங்கள். 'முனிவாஹன போகத்தில் இச்சுவைகளைச் சுவைத்துண்ண ப்ரஸக்தியுண்டோ' வென்று ஒரு ரஸிகர் நம்மைக் கேட்டார். எடுத்துப் பார்க்கலாமேயென்று சொல்லி நின்றேன். ... ... ... *

## ஸுபாஷிதங்கள்

*அஜ்ஞ: ஸுகமாராத்ய: ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ:,
ஜ்ஞாநலவதுர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி.*

உலகத்திலுள்ள அதிகாரிகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். (ஒன்றுமறியாத மூடர்கள். (1) எல்லாம் நன்கு தெரிந்த விசேஷ வித்துக்கள். (3) ஸ்வல்பம் தெரிந்து எல்லாம் தெரிந்துவிட்டதாக நினைத்துக் கொக்கரிக்குமவர்கள் என மூவகை. இவர்களுள், ஒன்றுமறியாத மூடர்களை எளிதில் தெளிவிக்கமுடியும். ஏனென்றால், அவர்கள் நல்லாரிடத்து நல்லது தெரிந்துகொள்ளவேணுமென்கிற விருப்பமுடையவர்களாதலால்.

இவர்களுக்கு மேற்பட்டவர்களான விசேஷ வித்துக்களை த்ருப்திபடுத்துவது மிகவும் எளிது. அவர்கள் பரம ரஸிகர்களானதையாலே அன்னவர்களோடு பேசுவது பரம ரஸமாயிருக்கும். சொல்லுகிற விஷயங்களை மிகவும் ரஸமாகவும் எளிதாகவும் அவர்கள் க்ரஹிக்க வல்லவர்களா தலால் அவர்களை ஆராதிப்பது மிகவெளிது.

மூன்றுமவர்களாகத் தெரிவிக்கப்பட்டவர்களுண்டே, அவர்களைத் தெளிவிக்க ப்ரஹ்மா வாலுமாகாது. எல்லாமறிந்ததாகப் பாவனைகொண்டு எதிலும் குதர்க்கம் செய்வதும், இன்னது சொல்லியிருக்கிறதென்று உணராமலே தூஷிப்பதும் அன்னவர்களது செயலாதலால் அவர்களுடைய வாழ்நாள் அப்படியே கழியவேண்டியதாகுமே யன்றி, தெளிவுபெற்றுக் களிக்க அவர்கள் பாக்கியமற்றவர்களே.

*வாசாடோக்ஜெள வாகம்ருதே வா ஸுகவீநாம்
ஸ்தோகப்ரஜ்ஞாஸ் துல்யத்ருசோ ஹந்த! பவந்தி,
கோமாயூநாம் கோகிலயூநாமபி சப்தேஷு
ஏகாகாரா மாநஸவ்ருத்திர் மஹிஷாணாம்*

உலகத்தில், வீண் வம்பு பேசுகிற வாயாடிகளுமுண்டு. அமுதொழுகுகின்ற இன்சொற் களைப் பொழிகின்ற உண்மைப் பண்டிதர்களுமுண்டு. வாயாடிகளென்பவர்கள் சிறிதும் படிப் பில்லாமல் எதையாவது வாய்வந்தபடி பேசிக்கொண்டிருப்பதையே தொழிலாகவுடையவர்கள். ரஸிகர்கள் காதுகொடுத்துக் கேட்கும்படியான பேச்சு அவர்களிடத்தில் ஒன்றுமிராது கசடறக் கற்றுணர்ந்தவர்களோ வென்னில்: அமுத மயமாகப் பேசி ''கலையிலங்கு மொழியாளர்'' என்னும்படி ஸகல சாஸ்த்ரார்த்தங்களும் ரமணீயமாகத் தொனிக்கும்படியான வாய்விறு உடையவர்களாயிருப்பார்கள். இவ்விருவகைப் பட்டவர்களுடையவும் பேச்சுக்களை விவேகி களான ரஸிகர்கள் கேட்டால், வாயாடிகளின் பேச்சை வெறுத்து உண்மைப் பண்டிதர்களின் பேச்சை உவப்பார்கள். அறிவிலிகளான அற்ப ஜனங்களோ வென்னில், பேச்சில் வாசி அறியமாட்டாமல் இரண்டிலும் ஒரு நிகராயிருப்பார்கள்.

இது என்போல வென்னில்; காட்டில் ஒருபுறத்தில் நரிகள் ஊளையிடுகின்றன; மற்றொரு புறத்தில் குயில்கள் பஞ்சமராகம் பாடுகின்றன; இவ்விரண்டு த்வனிகளும் எருமைக்கடாக்களின் காதிலே விழும். விழுந்ததனால் என்னாகும்? ஏதேனும் வாசி தெரியுமோ? அதுபோலவென்க. சொற்களில் ரஸமறிந்து உகப்பார் சிலரேயாவர். ... ... ... *

*ராத்ரிர் கமிஷ்யதி பவிஷ்யதி ஸுப்ரபாதம்
பாஸ்வாந் உதேஷ்யதி ஹஸிஷ்யதி பங்கஜஸ்ரீ:,
இத்தம் விசிந்தயதி கோசகதே த்விரேபே
ஹா ஹந்த ஹந்த! நளிநீம் கஜ உஜ்ஜஹார.

ஒரு காட்டில் ஒரு வண்டு: அது தாமரைப் பூவினுள் மதுவைப் பருகவேணுமென்னும் விருப்பத்துடன் ஒரு தாமரை யோடையில் ஒரு கமலத்தினுட்சென்று புக்குப் பருகத் தொடங்கிற்று: அப்பொழுது மாலைப் பொழுதாயிருந்தபடியால் இரவி மறைந்தவாறே அம் மலர் மூடிக் கொண்டது. எவ்வளவு பிரயாஸப்பட்டும் வண்டு வெளிக்கிளம்ப முடிய வில்லை. இரவு முழுவதும் அங்கேயே தங்கியிருக்க நேர்ந்தது. அது மனத்தில் எண்ணமிட்டுக் கொண்டிருந்ததாவது—'சிறிது பொறுத்துக்கொண்டு இங்கே யிருந்தோமாகில் இராப்

பொழுது கழிந்திடப்போகிறது; கதிரவன் வந்து தோன்றப்போகிறான்; தாமரை மலரப் போகிறது; உடனே நாம் வெளியில் யதேஷ்டமாகத் திரிந்து களிக்கப்போகிறோம்'— என்று. இங்ஙனே எண்ணிக் கொண்டிருக்கும்போதே ஒரு காட்டானை வந்து அவ்வோடையிற் புகுந்து அங்கிருந்த தாமரை மலர்கள் முழுவதையும் ஒரே கபளமாக வாரி விழுங்கிவிட்டது. இவ்வண்டும் அவ்வானையின் வயிற்றினுள்ளே ஜீரணித்துவிட்டது.

இதனால் இவ்வுலகில் நாமெல்லாரும் பலபலவாறு எண்ணமிட்டுக் கொண்டிருக்க, நம் எண்ணமெல்லாம் ஊமனர் கண்ட கனவிலும் பழுதாயொழிய பகவத் ஸங்கல்பமே பலியஸ்ஸாயிருக்குமென்று காட்டியவாறு, "அந்யோ ஹ்யந்யத் சிந்தயதி ஸ்வச்சந்தம் விததாம்யஹம்,'' என்று பகவான் தானும் பணித்துளன்.

*அங்குஷ்டாக்ரபரீணாஹ ஜிஹ்வாக்ராயாஸபீரவ:,

ஸர்வாங்கீணபரிக்லேசம் ஸஹந்தே ஹந்த ஸந்ததம்.*

கட்டை விரலின் நுனியளவான நாக்கின் நுனியை இளமையில் சிரமப்படுத்த அஞ்சியிருந்தவர்கள் தங்கள் வாழ்நாள் முழுதும் ஸகல அவயவங்களையும் சிரமப்படுத்தக் கடமைப்பட்டவர்களாவர். இதன் கருத்து யாதெனில், இளமையில் நாக்கைச் சிறிது சிரமப்படுத்திக் கல்வி பயின்றுவிட்டால் ஸுகமாக ஜீவனம் நடத்திக் கொள்ளலாம்; அங்ஙனம் கல்வி பயிலாதவர்கள் பிறகு ஜீவிகைக்காக ஸகல அவயவங்களினாலும் சிரமப்பட வேண்டியதாகும். தலையாலே மூட்டைகள் சுமந்தும், காலாலே வழி நடந்தும், கையாலே விறகு பிளத்தல் முதலியன செய்தும் ஆகவிப்படிப் பலபல அவயவங்களை சிரமப்படுத்தியே ஜீவிக்க நேரும். ஸ்வல்பகாலம் ஒரு அவயவத்தை சிரமப்படுத்தக் கூசுமவர்களுக்கு வாழ்நாள் உள்ளவரையில் இப்படி சிரமப்பட நேர்கின்றபடியால் கல்வி பயில முயல்வதே நன்று என்று தெரிவித்தவாறு.

*சத்வாரோ தநதாயாதா: பதர்மாக்நிந்ருபதஸ்கரா:,

யேஷ்டபுத்ராவமாநேந த்ரய: குப்யந்தி ஸோதரா:.*

பணத்திற்குப் பங்காளிகள் நான்கு பேர்கள்: 1. தருமம், 2. நெருப்பு, 3. அரசன் 4, கள்ளன், ஆக இந்த நால்வரும் பணத்தைக் கூறுகொண்டு அனுபவிக்கப் பிள்ளைகளாகப் பிறந்தவர்கள், 'தஸ்மாத் ஜயேஷ்டம் புத்ரம் தநேந நிரவஸாயயந்தி'' என்று வேதத்தில் சொல்லியபடி மூத்த புதல்வனுக்கு அதிகமான ப்ராப்தி உண்டாதலால் இங்கு மூத்த குமாரனாகச் சொல்லப்பட்ட தருமத்திற்கு அதிக பஹுமானம் அமைய வேண்டும். அப்படியல்லாமல் அவனை அவமானம் செய்யுமளவில், மற்ற மூன்று ஸஹோதரர்களும் சீற்றங்கொள்வார்களாம். (அதாவது) செல்வத்திற்கு தர்ம விநியோகம் இல்லையானால் அக்நிநஷ்டமாகவும், அரசர்களால் வரிகள் விதிக்கப்பட்டு அபஹ்ருதமாகவும், கள்ளர்களால் கவரப்பட்டதாகவும் இப்படி தீயவழிகளிலே அந்தப் பணத்திற்குச் செலவு ஏற்பட்டுவிடுமெனறபடி. ஆதலால் தர்மத்திலே முக்கியமாகக் கண்செலுத்த வேணுமென்றதாயிற்று.

தாதா நாஸ்தீதி வக்தா ச த்வாவிமௌ க்ருதிநௌ மதௌ.

யாஹ்யேஹீதி ப்ருவந் மர்த்ய: தாத்ருக்ஜந்மா பவிஷ்யதி.

தேஹியென்று கேட்டவுடனே கொடுப்பவனும் இல்லையென்று உடனே சொல்லுபவனும் ஸுக்ருதிகள். போ, வர என்றே சொல்லி இழுக்கடித்து நாள் தள்ளுபவன் மறுபிறப்பில் போவதும் வருவதுமாகவேயிருப்பான். ... ... ... ... *

# உபய வேதாந்த வினு விடைகள் (2)

( முன்னிதழ்த் தொடர்ச்சி )

கண்ணன் — வேதாந்த சாஸ்திரத்தில் பாஹ்யர்கள், குத்ருஷ்டிகள் என்று இரண்டு வகுப்புகள் கூறுகின்றுர்களே, அதைப்பற்றிச் சிறிது தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

ராமன் — வேதத்தை ப்ரமாணமாக ஒப்புக் கொள்ளாமல் அப்ரமாண மென்பவர்கள் பாஹ்யர்களெனப்படுவர்; வேதப்ராமாண்யத்தை நன்ருக இசைந்துவைத்தும் அதில் உண்மைப் பொருளுணராமல் அவத்தப்பொருள்களைச் சொல்லுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர்கள். கூரத்தாழ்வான் இவ்விருவகுப்பினரையும் பற்றி விநோதமாக ஒன்று ஸாதிக்கிறுர்;- வேதத்தை ப்ரமாணமாக இசையாத பாஹ்யர்களும், ப்ரமாண மென்றிசைந்துவைத்து அபார்த்தங்கள் கூறுகின்ற குத்ருஷ்டிகளுமாகிய இரு வகுப்பினரும் வாசியற்றர்வகளேயென்று ஸாதித்து, இதற்கு அழகான த்ருஷ்டாந்தமிரண்டு காட்டுகிறுர்: இரண்டு மான்கள் காட்டில் வெவ்வேறிடங்களில் திரிந்து கொண்டிருந்தன; இரண்டுக்கும் விடாய் (தாஹம்) அதிகமாயிருந்தது. இரண்டும் தண்ணீரைத் தேடியோடுகின்றன. காட்டில் கானல் என்று காணப்படுமே; (ம்ருகத்ருஷ்ணு என்றும், மரீசிகா என்றும் சொல்லப்படுவது) அது தண்ணீர் வெள்ளம் ஒடுவது போல் காணப்படும். அதைக் கண்ட ஒருமான் தண்ணீர் வெள்ளமென்றே மயங்கி ஆசையோடு ஒடா நிற்க, வழியிடையே சில காட்டு மிருகங்கள் இதனையடித்துக் கொன்று தின்று விட்டன. மற்றொரு மான் கானலைக் கண்டு மருளாமல் மெய்யாகவே ஒரு ஜலாசயத்தைக் கண்டு அதில் தண்ணீர் குடிக்க இறங்கிற்று; ஆனல் துறையல்லாத் துறையிலே இறங்கினபடியாலே அங்கிருந்த ஒரு முதலை இதனைக் கவ்வி முடித்திட்டது. இவ்விரண்டு மான்களுக்கும் ஒரு விஷயத்தில் ஸாம்யமும், ஒரு விஷயத்தில் வைஷம்யமும் காண்கிறேம். உயிர் மாண்டொழிந்த விஷயத்தில் ஸாம்யம்; 'ஒன்று கானலை ஜலாசயமாக மருண்டது, மற்றென்று உண்மையான ஜலாசயத்திலேயே இறங்கிற்று' என்பதனுல் வைஷம்யம். அதனுலென்ன! இரண்டும் உயிர் மாண்டொழிந்தபடியால் இரண்டுக்கும் வாசியில்லையென்பதே தேறும். இதைப்போல் வேதத்தை அப்ரமாணமென்று தள்ளினபாஹ்யர்களும், ப்ரமாணமென்றிசைந்து வைத்தும் ஏலாப் பொருள்களை ஏற்றிக் கூறுகின்ற குத்ருஷ்டிகளும் உஜ்ஜீவிக்கப் பெருதவர்களென்னும் விஷயத்தில் வாசியற்றவர்களேயாவர் என்பது கூரத்தாழ்வான் திருஷ்டாந்தமுகேந ஸாதித்த விஷயம்.

கண்ணன்—ராமா! ஆழ்வான் ஸாதித்த இரண்டு த்ருஷ்டாந்தங்களும் மிகப் பொருத்தமானவை யென்று நினைக்கிறேன். அந்த ச்லோகம் ஒவ்வொருவர்க்கும் கண்டபாடமாக இருக்க வேண்டுமென்று எண்ணுகிறேன். அந்த சுலோகம் எவ்விடத்திலுள்ளது? பூர்த்தியாகச் சொன்னுல் மனப்பாடம் செய்து கொள்ளுகிறேன்.

ராமன்—கூரத்தாழ்வான் பஞ்சஸ்தவம் ஸாதித்திருப்பது தெரியுமன்றே? அதில் முதல் ஸ்தவம்—ஸ்ரீவைகுண்டஸ்தவம். நூறு சுலோகங்கள் கொண்ட அதில் இரண்டாவது தசகத்தில்-

*பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேபி அபாரம்
கோரம் தமஸ் ஸமுபயாந்தி ந ஹீக்ஷஸே தாந்,
ஜக்தஸ்ய காநநம்ருகை: ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ:
காஸாரஸத்வ நிஹதஸ்ய ச கோ விசேஷ:? *

என்பது அந்த ச்லோகம்; உண்மையில் இது யாவரும் கண்டபாடம் செய்து வைத்துக் கொள்ளத் தக்கதே.

கண்ணன்—இங்ஙனே பாஹ்யர்கள் குத்ருஷ்டிகளென்கிற பாகுபாடு கூரத்தாழ்வான் தாமே செய்தருளினதா? அவர்க்கு முன்னமே யாராவது செய்திருக்கிறார்களா?

ராமன்—ஏன்? மநுமஹர்ஷி இந்தப் பாகுபாட்டை எடுத்துக் கூறியுள்ளார்; *யா வேத பாஹ்யா: ஸ்ம்ருதய: யாஷ்ச காஷ்ச குத்ருஷ்டய:, தாஸ் ஸர்வா நிஷ்ப்பலா: ப்ரேத்ய தமோநிஷ்டா ஹி தா: ஸ்ம்ருதா:* என்பது மநுவசனம். இதனை ஆழ்வான் திருக்குமாரர் பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ. உத்தர ஷ்தகத்தின் முகப்பிலேயே எடுத்துக் காட்டியருளினர்—

*யா வேதபாஹ்யாஸ் ஸ்ம்ருதயோர்ஹதாதே: வேதேஷு யா: காஷ்ச குத்ருஷ்டயஸ் தா:,
ஆகஸ்க்ருதாம் ரங்கநிதே! த்வதத்வநி அந்தங்கரண்ய: ஸ்ம்ருதவாந் மநுஸ் தத்.*

என்பது பட்டருடைய ச்லோகம். இதில் *ஸ்ம்ருதவாந்மநுஸ்தத்* என்றது குறிக் கொள்ளத் தக்கது.

கண்ணன்—ராமா! இதனால் பாஹ்யமதமும் குத்ருஷ்டிமதமும் வைதிகமதம் போலே அநாதி மதங்களேயென்று ஏற்படுகிறதல்லவா?

ராமன்-ஆமாம்; நம்மாழ்வார் திருவிருத்தத்தில் "வணங்குந்துறைகள் பலபல வாக்கி, மதிவிகற்பால் பிணங்குஞ்சமயம் பல பல வாக்கி, அவையவைதோறு அணங்கும் பல பல வாக்கி நின் மூர்த்தி பரப்பிவைத்தாய் *என்றருளிச் செய்திருக்கிறாரே, அஃது இன்று நேற்று அருளிச் செய்தது? இருள்வெளிச்சம் என்கிற இரண்டையெடுத்துக் கொள்; இருள்முன்னே தோன்றியதா? வெளிச்சம் முன்னே தோன்றியதா? என்று ஆராயத் தொடங்கினால் இதில் நிர்ணயம் காணமுடியுமோ?

கண்ணன் — பாஹ்யர்களுக்கும் குத்ருஷ்டிகளுக்கும் தம்மில் வாசியில்லையென்று கூரத்தாழ்வான் ஸாதித்திருந்தாலும் நெடுவாசியுண்டென்றே சொல்லலாம் போலிருக்கிறது. அதாவதென்னென்னில்; வேதத்தில் புகுந்து அபார்த்தங்கள் செய்வதிற்காட்டிலும் வேதத்தில் புகாமலேயிருப்பது மேலல்லவா? அவர்களால் வேதங்களுக்கு ஹாநியொன்றுமில்லையே இங்கு எனக்கொன்று நினைவுக்கு வருகிறது: காஞ்சீபுரத்தில் (கீர்த்திமூர்த்தியான) ஸ்ரீமத் குன்றபாக்கம் சோளச்சார்ஸ்வாமியென்கிற வித்வத்ஸார்வபௌமர் திருவல்லிக்கேணியில் வேதவேதாந்த வர்த்திநீ ஸபையில் நியாய வேதாந்தங்களுக்குப் பரீக்ஷாதிகாரியாக எழுந்தருள்வது வழக்கமாம். ஒரு வருஷம் இரு வித்யார்த்திகள் ஸ்ரீபாஷ்யத்தில் பரீக்ஷ்யர்களாக வந்தார்களாம்; இருவர்க்கும் கொடுத்தருளின ப்ரச்நபத்ரிகைகளின் உத்தரங்களை சோதிக்கும் போது, ஒருவர்க்கு (அஜ்ஞானம்) என்றும், மற்றொருவர்க்கு (அந்யதாஜ்ஞானம்) என்றும் பெயரிட்டு அஜ்ஞானநபர்க்குப் பூர்ண ஸன்மானமும், அந்யதாஜ்ஞான நபர்க்குப் பயணச் செலவு மட்டும் கொடுப்பித்தாராம். 'இப்படி திருவுள்ளம்பற்றினதற்கு என்ன காரணம்?' என்று கூடவிருந்த வித்வான்கள் கேட்க, அதற்கு அந்த ஸ்வாமி ஸாதித்தாராம்—''அஜ்ஞானமென்று பேரிடப் பெற்றவர் (ஸ்ரீபாஷ்ய) க்ரந்தத்தின் அருகேயும் சென்றவரல்லர்; வினாக்களுக்கு அபார்த்தமாக ஒன்றும் விடையெழுதாமலிருந்தார்; ஸ்ரீஸூக்திக்கு ஒன்றும் ஹாநியில்லாமே போயிற்று. அந்யதாஜ்ஞானமென்று பேரிடப் பெற்றவர் பலபல ஸ்ரீஸூக்திகளுக்கு அபார்த்தங்களையே எழுதி வைத்து ஸ்ரீஸூக்திகளுக்கு ஹாநியை விளைத்தார்; இப்படிப்பட்ட இவரை விட முந்தினவர் மேம்பட்டவர்தானே? என்று. அது கேட்ட எல்லாரும் 'யுக்தம்! யுக்தம்!!' என்றார்களாம். இது போல, வேதத்தினுட்புகுந்து அபார்த்தங்களைப் பிதற்றுகிற குத்ருஷ்டிகளிற் காட்டிலும் வேதத்தின் ஜோலிக்கே வாராத பாஹ்யர்கள் மேம்பட்டவர்களல்லவா?

ராமன்—நன்று சொன்னாய்; உனக்கு நினைவுக்கு வந்ததொன்றை நீ சொன்னாப்போலே எனக்கு நினைவுக்கு வருவதொன்றை நான் சொல்லுகிறேன் கேள்; நம்மாழ்வார் திருவாய்மொழியில் (1. 5) *வளவேழுலகின் முதலாய* என்றொரு பதிகமருளிச் செய்கிறாரன்றோ? இப்பதிகத்தின் ப்ரமேயம் என்னவென்றால், பரமபவித்திரனான பரமபுருஷனை மிக நீசனான நான் அநுபவிக்கப்பாரிப்பது அத்தலைக்கு மிகவும் அவத்யமாயிற்றே; புரோடாசத்தை நாயும் நரியும் தீண்டுமாபோலே பகவத்விஷயத்தை அந்தோ! நான் தீண்டிக் கெடுக்கப்பார்ப்பது என்னே! என்று அகலப்பார்ப்பது இப்பதிகத்தின் ப்ரமேயம்; அதில் ஒரு பாசுரத்தில் ஆத்மாநுபவ ஸக்தர்களான கைவல்யநிஷ்டர்களைக் கொண்டாடுகிறார் [கெடியாராக்கையடியாரைச் சேர்தல் தீர்க்குந் திருமாலை, அடியேன்காண்பானலற்றுவன் இதனின் மிக்கோரயர்வுண்டே!] நீ பகவத் விஷய காலக்ஷேபம் செய்திருக்கிறாயல்லவா? (கண்ணன்) பகவத் விஷயகாலக்ஷேபம் நடைபெறுமிடங்களில் நானும் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்து உறங்கினதுண்டு; இவ்விடத்து அர்த்த விசேஷத்தை யுணர்த்தவேணும். (ராமன்) * செடியாராக்கையடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலை* என்பதை ஒரு தமிழ் வித்வானிடம் கொடுத்துப் பொருளெழுதச் சொன்னால் என்ன எழுதுவன் தெரியுமோ? அடியாரை—* நலமந்தமில்லதோர்நாடு புகவிரும்பித் திருவடிபணியும் பக்தர்களை, செடியாராக்கை சேர்தல் தீர்க்கும் திருமாலை—தேஹவியோகத்தைச் செய்வித்துத் தன் திருவடி சேர்த்துக்கொள்ளவல்ல திருமாலை—என்று பொருளெழுதுவர். இது ப்ரக்ருதஸ்தலத்திற்கு அடியோடு பொருந்தாதென்று நம் ஆசாரியர்கள் அருளிச்செய்யும் பொருள் விலக்ஷணமானது. இங்கு அடியாரென்கிறது கைவல்யார்த்திகளை; (அதாவது) ஆத்மாநுபவத்தையே புருஷார்த்தமாகக் கொண்டு [* ஜராமரண மோக்ஷாய மாம் ஆச்ரித்ய யதந்தியே* என்கிறபடியே] அந்த ஆத்ம போகபுருஷார்த்த ஸித்திக்காக மீண்டுமீண்டும் தேஹபரிக்ரஹம் ஏற்படாதபடி ஆத்யந்திக தேஹவிநாசத்தை விரும்பும் கைவல்யார்த்திகள் இங்கு அடியாரெனப்படுவதாக நம் ஆசாரியர்களின் நிர்வாஹம். என்னைப்போலவே பரமபவித்திரனான பரமபுருஷனை அணுகிக் கெடுத்துவிடாதே விலகி நிற்கிற கைவல்ய நிஷ்டர்கள் மஹா பாக்யசாலிகள் என்று அவர்களைக் கொண்டாடுகிறபடி. அடிமைக்கு இசைந்தவர்களையன்றோ அடியாரென்ன வேண்டும்; அடிமைக்கு இசையாத கேவலரை அடியாரென்னலாமோ? என்று கேள்வி பிறக்கும். இதற்கும் ஸமாதானமருளிச் செய்கிறார்கள் ஆசாரியர்கள். சேஷபூதர்களை அடியாரென்பது. சேஷத்வமாவது என்ன? " சேஷ்யதிசயாதாயகத்வம் - சேஷத்வம் " என்பர் பெரியோர். சேஷியான எம்பெருமானுக்கு ஓர் அதிசயத்தை விளைப்பவர்கள் தாம் சேஷபூதர். அவனைக் கிட்டி அவத்யத்தை விளைக்குமவர்கள் அவனுக்கு அதிசயாதாநம் பண்ணினவர்களாவரோ? ஒதுங்கிநிற்குமவர்களே அதிசயத்தை விளைத்தவராவர். அன்னவர்களே அடியார்கள் என்பது ஆழ்வார் திருவுள்ளம். தம்முடைய நைச்சியத்தின் பரமகாஷ்டையை வெளியிடும் வகைகளில் இதுவொரு சிறந்தவகை என்றுகொள்ளவேணும்.

கண்ணன்—ஆழ்வார் இப்போது அடிமைக்கு இசையாத நிலைமையிலன்றோ இருந்து கொண்டு பேசுகிறார்; அப்படிப்பட்டவர் பாசுரம் தொடங்கும் போதே*அடியேன் (சிறிய ஞானத்தன்)* என்று தொடங்குகின்றாரே, இது கூடுமோ? எம்பெருமானையணுகித்தானே அடிமை செய்யவேண்டும்; அணுகுவது அவத்யமென்றிருக்குமிந்நிலையில் 'அடியேன்' என்று எங்ஙனம் ஸாதிக்கிறார்?

ராமன் — இந்தக் கேள்வி எல்லாராலும் கேட்கமுடியாது; இப்படியொரு ஸந்தேஹமே ஸாமாந்யமாகத் தோன்றமாட்டாது. வியாக்கியானங்களில் ஸமாதானம் ஸாதித்திருக்கிறார்கள். உலக வழக்கையொட்டி நான் சொல்லுகிறேன் கேள். ஆசார்ய சிஷ்யர்களிருவர். சிஷ்யன் ஒரு பெரிய தவறு செய்துவிட்டான். அதையறிந்த ஆசாரியர் சிஷ்யனைக் கடினமாகக் கண்டிக்கிறார்; அப்போது சிஷ்யன் சொல்லுகிறான்—'ஸ்வாமி! இப்படிச் சொன்னால் அடியேனுக்கு மிகவும் கோபம் வரும்; இனி தேவரீர் முகத்தில் கூட விழிக்க மாட்டேன்' என்கிறான். இந்த வாக்கியத்திலுள்ள * அடியேனுக்கு ஏதேனும் அர்த்தமுண்டோ? (நான்) என்னவேண்டுமிடத்து வாஸநாபலத்தாலே அடியேனென்று வந்துவிடுகிறது.

கண்ணன் — வானமாமலையிலுள்ளவர்களின் கதையொன்று அடியேன் கேள்விப்பட்டிருக்கிறேன். அவ்வூரார் வாதிகளாகவோ பிரதிவாதிகளாகவோ ஸாக்ஷிகளாகவோ நீதிமன்றங்களுக்குச் செல்ல நேருமாம்; அங்கே 'ராகவாச்சாரியார்!' என்று சேவகன் அழைக்கையில் அடியேன்! அடியேன்!! என்று சொல்லிக்கொண்டு ஓடுவராம் ராகவாச்சாரியர். அப்போது அதிகாரி 'ஓய்! இங்கே என்னனோ அடியேன்' என்பராம். அதற்கு அவர் 'இல்லையில்லை, ஸ்வாமி ஸந்நிதி வழக்கந்தாலே வந்துவிட்டது' என்பராம். இனிமேல் சொல்லக்கூடாது என்பராம் அதிகாரி. அதற்கும் 'அடியேன்!? என்பராம் ராகவாசாரி. இந்த அடியேனுக்கு என்று(ததாஸ்து) அர்த்தம் வானமாமலை ஆழ்வார்திருநகரி பக்கங்களில் புல்சுமைக்காரன் விறகு சுமைக்காரன் முதலானோரையழைத்தாலும் அடியேன் என்றுதான் சொல்லுவர்களாம்.

ராமன்—தெலுங்கு தேசத்து வைஷ்ணவர்களும் ஹிந்தீ மராட்டி குஜராதி வைஷ்ணவர்களும் (ஆசார்யாச்ரயணம் பெற்றவர்கள்) அடியேன் என்கிறார்களே, அதற்கு இன்னது அர்த்தம் என்று தெரிந்துகொண்டா சொல்லுகிறார்கள்? கண்ணா! ஒன்றின்மேலொன்றாக விஷயம் வளர்ந்துவிட்டது. குத்ருஷ்டிகளை விட பாஹ்யர்கள் மேம்பட்டவர்கள் என்கிற வார்த்தையிலிருந்து இவ்வளவும் வந்துவிட்டது. பாஹ்யர்கள் உண்மையில் கொண்டாடத் தக்கவர்களல்லர். அவர்கள் வேதத்திற் புகுந்து அபார்த்தங்கள் செய்யாவிட்டாலும் வேதத்திற்கு நேர் விபரீதங்களான அர்த்தங்களைப்பிதற்றுமவர்களாகையாலே குத்ருஷ்டிகளோடொப்ப அந்த பாஹ்யர்களும் பஹிஷ்மாந பாஹ்யர்களே யாவர். இராமாநுச நூற்றந்தாதியில் * தற்கச் சமணரும் சாக்கியப் பேய்களும் தாழ்சடையோன், சொற்கற்ற சோம்பரும் சூனியவாதரும், நான்மறையும் நிற்கக் குறும்புசெய் நீசரும் மாண்டனர் நீணிலத்தே பொற்கற்பக மெம்மிராமானுசமுனி போந்த பின்னே * என்றார். ஆர்த்திப்ரபந்தத்தில். * சாறுவாக மதநீறுசெய்து சமணச்செடிக்கனல் கொளுத்தியே சாக்கியக்கடலை வற்றுவித்துமிகு சாங்கியக்கிறிமுறித்திட, மாறுசெய்திடுகணாத வாதியர்கள் வாய்தகர்த்தறமிகுத்து மேல் வந்த பாசுபதர் சிந்தியோடும் வகை வாதுசெய்த வெதிராசனார் கூறுமா குருமதத்தொடோங்கிய குமாரிலன்மதமவற்றின்மேல் கொடியதற்கசரம்விட்டபின் குறுகி மாயவாதியரை வென்றிட, மீறிவாதில்வரு பாக்கரன் மதவிலக்கடிக் கொடியெறிந்துபோய் மிக்க யாதவமதத்தை மாய்த்தபெரு வீரர்நாளு மிக வாழியே * என்றருளிச்செய்தார் மணவாள மாமுனிகள். யதிராஜஸப்ததியில் - * கபர்திமதகர்தமம் கபிலகல்பநாவாகுராம் துரத்யயமதீத்ய தத் த்ருஹிண தந்த்ரயந்த்ரோதரம், குத்ருஷ்டி குஹநாமுகே நிபதத: பரப்ரஹ்மண: கரக்ரஹ விசக்ஷணோ ஜயதி லக்ஷ்மணோயம் முநி:* என்றார் தேசிகன்.

கண்ணன்— இந்த பாஹ்ய குத்ருஷ்டித் தொல்லைகள் எனக்குப் பிடிக்கவில்லை. நம்முடைய எம்பெருமானார் தரிசனத்தைச் சார்ந்த நற்பொருள்களையெல்லாம் கேட்கவே எனக்குக் குதூஹலம். இனி அவற்றையே கேட்கிறேன், சொல்ல வேணும்.

ராமன்— பாஹ்யக்ருஷ்டிப்ரஸ்தாவம் நீயாகவே பண்ணினபடியால் இவ்வளவு சொல்ல நேர்ந்தது. இனி விசிஷ்டாத்வைதவிஷயங்களிலேயே சர்ச்சை நடக்கட்டும். (தொடரும்.)

# ஸ்ரீராமாநுஜ சம்பூக்ரந்தம்

பகவத் பாஷ்யகாரரான எம்பெருமானுருடைய திவ்ய சரித்திரங்களை உள்ளபடி பேசப் பிறந்த ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களில் ஸ்ரீராமாநுஜ சம்பூக்ரந்தமென்பதும் ஒன்றென்பர்; இஃது அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளது. சென்னை எழும்பூரில் வாழும் ஸஹ்ருதய ஸுஹ்ருந்மணியான ஸ்ரீமதுபயவே. R. V. சேஷாத்ரியாசாரியர் (Advocate) ஒருஸமயம் காஞ்சிக்கு வந்திருந்த போது இந்த சம்பூக்ரந்தத்தைக் கொணர்ந்து காட்டினுர். நிதி கண்டதுபோல் கண்டேனிதனை. இது 1941-ஆம் வருஷத்தில் (அதாவது மூப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு) மதராஸ் கவர்ன் மெண்டு ஓரியண்டல் மானஸ்க்ரிப்ட் ஸிரீஸ் நெ 2 ஆக சென்னை கவர்ன்மெண்டு வெளியீடு களில் ஒன்ருக அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளது. தேவநாகரலிபியில் மிகவுயர்ந்த காகிதத்தில் 159 பக்கங்கள்கொண்ட மூலமும், அதன்பிறகு 50 பக்கங் கொண்ட டிப்பணியுமாக வெகு நேர்த்தியாய் அச்சிடப்பட்டுள்ளதிது. சென்னை யூனிவர்ஸிடியில் ஒன்றரைரூபா விலைக்குக் கிடைக்கின்றதாமிது. பண்டித. திருமலைநல்லான் V. கிருஷ்ணமாசாரியர் தாம் இதனை அச்சிடு வித்தவரென்றும், டிப்பணியெழுதியவரும் அவரேயென்றும் தெரியவருகின்றது. வித்யாஸாகர. வித்யாவாசஸ்பதி. ப்ரொபஸர். ப்ரஹ்மஸ்ரீ) P. P. S. சாஸ்திரியாரென்று ப்ரஸித்தராயிருந்த ஸுப்ரம்மண்ய சாஸ்த்ரியார் ஆங்கிலத்திலெழுதிய விரிவான முகவுரையொன்று இதில் சேர்க்கப்பட்டுள்ளது, அதிலுள்ள விஷயத்தின் ஸாரம் வருமாறு :—

ஸம்ஸ்க்ருதபாஷையில் சரித்திரஸம்பந்தமான நூல்கள் அபூர்வம்; ஆகவே ஸ்ரீராமா நுஜரின் சரித்திரத்தை விளக்கத் தோன்றிய இந்நூலைப் பிரசுரம் செய்வது அவசியம் இந்த சம்பூக்ரந்தம் ஸ்ரீராமாநுஜருடைய வாழ்க்கை வரலாறுகளைத் தெரிவிப்பது. முதன்முதலாக வடுகநம்பியென்கிற ஸ்ரீராமாநுஜ சிஷ்யரே ஸ்ரீராமாநுஜ சரித்திரத்தை 114 சுலோகங்கள் கொண்ட யதிராஜ வைபவமென்கிற காவியத்தினுல் நிபந்தித்தவர், யதிராஜ ஸப்ததி, யதிராஜ விம்சதி என்னுமிவை ஸ்ரீராமாநுஜரைப்பற்றிய ஸ்துதிநூல்கள். ஸ்ரீராமாநுஜர் கி. பி. 1017 முதல் 1137 வரை வாழ்ந்திருந்த ஸ்ரீ வைஷ்ணவாசாரியர். நூலாசிரியர் ராமாநுஜாசாரியரென் பவர். வாதூலகோத்ரர். பாவநாசாரியரின் திருக்குமாரர். கருடபஞ்சாசத்தின் வியாக்யாதா வான ராமாநுஜாசாரியர் 1450-ல் வாழ்ந்தவர். பஞ்சஸ்தவ வ்யாக்யாதாவான ராமாநுஜா சாரியர் கர்க்க கோத்ரி. அவர் வேறுபட்டவர். வேதபாத ராமாயணமும், ராமாநுஜீய மென் கிற ஸ்ரீ ராமாயண வியாக்கியானமு மெழுதியவரான வாதூல ராமாநுஜாசாரியர் வேறு; இவ்வாசிரியர் கந்தாடை ராமாநுஜர் எனப்படுவர். ராமாயண வ்யாக்யாதர் வைத்யநாத தீக்ஷிதர் தமது வியாக்கியானத்தில் இவரைக் குறிப்பிடுகிறுர். வேதாந்த விஜயத்தின் ஆசிரிய ரான வாதூல ராமாநுஜாசாரியர் அப்பய தீக்ஷிதருடைய ஸமகாலத்தவர் (1570 ஸு) இந்தராமாநுஜ சம்பூக்ரந்த கர்த்தாவின் வம்சம் முதலியாண்டானிடமிருந்து தொடக்கமானது. இவர் கி. பி. 1600-ல் வாழ்ந்தவரென்று தெரிகிறது. இந்நூலின் ஓலைச்சுவடிகள் நான்கு கவர்ய மெண்டு ஓரியண்டல் மானஸ்க்ரிப்டு லைப்ரெரியில் தானுள்ளன. பாடபேதமில்லாதவை. அவை களை ஆதாரமாகக் கொண்டே இது பதிப்பிக்கலாயிற்று. (இவ்வளவே முகவுரையின் ஸாரம்

(ஒரு சிறு குறிப்பு.) இம்முகவுரைகாரர் ராமாநுஜாசாரியர்களின் வேற்றுமைகளை நிரு பித்துவருமடைவில் ஒரு ராமாநுஜாசாரியரை வேதாந்த தேசிகரின் பௌத்ரியின் குமாரர் என்று குறிப்பிடுகிறுர். இது ஸம்பாவிதமா? என்பதைப் பெரியார்கள் விமர்சிப்பது. வேதாந்த குருவின் திருக்குமாரர்க்கு ஸந்ததியில்லையே...... ......

"கத்யபத்யமயம் காவ்யம் சம்பூரித்யபிதீயதே" என்பராதலால் சுலோகங்களும் கத்யங்களும் கலந்து இயற்றப்படும் காவியம் சம்பூ எனப்படும். போஜசம்பூ, பாரதசம்பூ, விச்வகுணாதர்ச சம்பூ, வரதாப்யுதய சம்பூ, ஆசார்ய சம்பூ.........முதலான சம்பூ ப்ரபந்தங்கள் ப்ரஸித்தமாகவுள்ளன. வெறும் சுலோக ரூபமான காவியங்களிற் காட்டிலும் இப்படி கத்ய பத்ய ரூபமான சம்பூக்ரந்தம் பாஷா வ்யுத்பத்தியை யுண்டாக்குவதில் மிகவும் வல்லதென்னுமிடம் அநுபவ ஸித்தம். எம்பெருமானாருடைய சரித்திரத்தை விளக்கும் சம்பூ ப்ரபந்தம் இஃதொன்று தவிர வேறொன்றிருப்பதாகத் தெரியவில்லை. இதனை இயற்றியவர் சிறந்த ப்ரௌடகவி யென்பது ரசநாவைகரியினால் நன்கு தெரிய வருகின்றது. (அச்சுப்பிழைகள் சில காணப்படுகின்றன.)



இதில் பத்து ஸ்தபகங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு ஸ்தபகத்திலுமுள்ள கதைப்போக்கும் அதன் முகப்பில் பதிப்பாசிரியரால் பொறிக்கப்பட்டிருப்பதால் அதை யிங்கு மொழிபெயர்த்தெழுதுகிறேன் — இதனால் இந்நூல் முழுதும் எளிதாகப் படிக்கப்பட்டதாகு மென்று.



முதல் ஸ்தபகத்தில்—நூல்களின் முறைப்படி மங்களாசரணம். ஸ்ரீபெரும்பூதூரின் சிறப்பை வருணித்தல். ஸ்ரீ வைகுண்டநாதன் திருவனந்தாழ்வானை ஸ்ரீ ராமாநுஜராகத் திருவவதரிக்கும்படி கட்டளையிடுதல். எம்பெருமான் கேசவாத்வரிக்கு [ஸ்ரீ ராமாநுஜருடைய திருத்தந்தையார்க்கு]ப் பர்பஸம் அனுப்புதல். அந்த கேசவாத்வரிக்கு எம்பெருமான் கனவில் காட்சி தருதல்.

இரண்டாம் ஸ்தபகத்தில் — கேசவாத்வரியின் திருத்தேவியார் திருவயிறு வாய்த்தது. ஸ்ரீ ராமாநுஜர் திருவவதரித்தது. ஸ்ரீ ராமாநுஜரை அநுக்ரஹித்தருளப் பெரிய திருமலைநம்பி திருப்பதியிலிருந்து எழுந்தருளினது. ஜாதகர்மம் முதலிய ஸம்ஸ்காரங்களைச் சிறப்புற நடத்தி வைத்தது.



மூன்றாம் ஸ்தபகத்தில்—ஸ்ரீராமாநுஜர் வேதாந்தமதிகரிக்க யாதவப்ரகாசரிடம் சென்று சேர்ந்தது. யாதவப்காசரிடமிருந்து அத்வைத ஸம்பிரதாயத்தை யதிகரித்தது. (எம்பாரென்கிற) கோவிந்தபட்டரும் யாதவப்ரகாசரிடம் வாசிக்கவந்து சேர்ந்தது. ஸ்ரீ ராமாநுஜர் நிர்விசேஷாத்வைதத்தைக் கண்டித்துரைத்தது. கப்யாஸ ச்ருதிக்கு ஹேயமான பொருளை மறுத்து உண்மையான பொருளையுணர்த்தியது. யாதவப்பிரகாசர் சிஷ்யர்களுடனே காசியாத்திரை புறப்பட்டது. கோவிந்த பட்டர் மூலமாக யாத்திரையின் சூதைத் தெரிந்து கொண்டு ஸ்ரீ ராமாநுஜர் இடைவழியில் விலகி ஏகாகியாய் விந்தியாடவியில் அலைந்தது. பேரருளாளனும் பெருந்தேவித்தாயாரும் வேடக்கோலம் பூண்டு அங்கே காட்சிதந்து ராமாநுஜரைக் கச்சிப்பதி சேர்ப்பித்தது. யாதவப்ரகாசர் கங்காயாத்திரை முடித்துக்கொண்டு காஞ்சிக்குத் திரும்பிவந்து சேர்ந்தது.

நான்காவது ஸ்தபகத்தில்—ஸ்ரீரங்கத்திலெழுந்தருளியிருந்த ஸ்ரீயாமுநாசாரியர் (ஆளவந்தார்) ஸ்ரீ ராமாநுஜரைப்பற்றிக் கேள்விப்பட்டு அவரைக் கடாக்ஷிக்கக் காஞ்சிக்கெழுந்தருளிக் கடாக்ஷித்துவிட்டுத் திருவரங்கம் திரும்பியெழுந்தருளினது. ஸ்ரீ ராமாநுஜர் ராஜபுத்ரிக்கு நேர்ந்திருந்த ப்ரஹ்மராக்ஷஸ பீடையைப் போக்கியருளினது. ராமாநுஜர் யாதவப்ரகாசரிடத்தில் அத்வைத ச்ருதிகளுக்கு விசிஷ்டாத்வைதபரமாகப் பொருள் விவரித்தது. சீற்றங்

கொண்ட யாதவப்ரகாசர் ராமாநுஜரை வெறுத்துவிட்டது. ராமாநுஜர் விலகிக்கொண்டது.

ஐந்தாவது ஸ்தபகத்தில்—ஸ்ரீராமாநுஜருடைய பிரபாவங்களைக் கேட்டறிந்த ஆளவந்தார் அவரை ஸ்ரீரங்கத்திற்கு அழைத்துவரும்படி தம்முடைய ப்ரியசிஷ்யரான பெரிய நம்பியைக் காஞ்சிக்குப் போகவிடுதல். ஸ்ரீ ராமாநுஜர் பெரியநம்பியுடன் திருவரங்கம் பெரியகோயில் வந்துசேரும் ஸமயமும் அங்கே ஆளவந்தார் பரமபதித்தஸமயமும் ஒன்றாயிருந்ததனால் ஆளவந்தாருடைய சரமத்திருமேனியைச் ஸேவிக்கப்பெற்ற ஸ்ரீ ராமாநுஜர் அவருடைய திருவுள்ளக் குறைகள் மூன்றையறிந்து அவற்றைத் தாம் நிறைவேற்றுவதாக ப்ரதிஜ்ஞை செய்தது. ஸ்ரீகாஞ்சிக்கு மீண்டுவந்து சேர்ந்த ராமாநுஜர் திருக்கச்சிநம்பிகளிடம் ஆறு வார்த்தை கேட்டது. பெரியநம்பியிடம் ஆச்ரயிக்கக் கோயிலேறப் புறப்பட்ட ராமாநுஜர் வழியிடையில் நம்பியை ஸந்திக்க நேர்ந்து அப்போதே அவரிடம் பஞ்சஸம்ஸ்காரம் பெற்று, பெரியநம்பியுடன் கச்சிப்பதி வந்து சேர்ந்து இருவரும் ஒரு திருமாளிகையில் வாழ்ந்திருந்த காலத்து இருவருடைய மனைவியர்க்கும் வாக்கலஹம் முற்றியதனால் பெரியநம்பி தம் தேவியாருடன் கோயில் சென்று சேருதல். ஸ்ரீ ராமாநுஜர் ஸம்ந்யாஸாச்ரமம் ஸ்வீகரித்தது. கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் ஸ்வாமி திருவடிகளிலேவந்து ஆச்ரயித்தது. யாதவ ப்ரகாசரும் ஸ்வாமி திருவடிகளிலாச்ரயித்து த்ரிதண்டி ஸம்ந்யாஸியானது.

ஆறாவது ஸ்தபகத்தில்—ஸ்வாமியைக் கோயிலுக்கெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போவதற்காகத் திருவரங்கப் பெருமாளரையர் கச்சிப்பதிக்கு வந்து சேர்ந்தது. ஸ்வாமி திருவரங்கம் பெரியகோயில் சென்று சேர்ந்து ஸந்நிதியில் மங்களாசாஸனம் செய்தருளி ஸ்ரீரங்க ஸ்ரீயைப் பரிஷ்காரம் செய்தருளினது. பெரியநம்பி பக்கலில் விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயார்த்தங்களை லபித்தது. ஆசார்யமுகேந திவ்ய ப்ரபந்தங்களோதினது. திருக்கோட்டியூர் நம்பி பக்கல் சரமச்லோக ரஹஸ்யார்த்தம் கேட்டது. திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிப் பொருள் கேட்டது. யஜ்ஞமூர்த்தியென்னும் பிரபல பண்டிதரான ஏகதண்டி ஸம்ந்யாஸியைத் திருத்திப் பணிகொண்டு அருளாளப் பெருமாளெம்பெருமானாராக்கினது.

ஏழாவது ஸ்தபகத்தில்—சைவதர்மநிரதராய்க் காளஹஸ்திசென்று சேர்ந்திருந்த கோவிந்த பட்டர் (எம்பார்) திருத்தமுற்றுத் திருப்பதி சேர்ந்திருக்க, அவரைக் காண வேண்டி ஸ்வாமி திருப்பதிக்கெழுந்தருளினது. அங்குத் திருமலைநம்பி பக்கலில் ஸ்ரீ ராமாயண ரஹஸ்யார்த்தங்கள் கேட்டுத் திரும்புகையில் எம்பாரைப் பரிசாகப் பெற்றுக்கொண்டுவந்தது. பழையபடி திருவரங்கம் பெரிய கோயிலில் வாழ்ந்தருளுகையில் திருவரங்கத்தமுதனார் இராமாநுச நூற்றந்தாதி பணித்தது.

எட்டாவது ஸ்தபகத்தில்—வடநாட்டுக்கெழுந்தருளி போதாயநவ்ருத்தி க்ரந்தத்தைக் கடாக்ஷித்துவந்து ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்தது. திக்விஜய யாத்திரை செய்தருளினது. சாரதா பீடத்தில் ஸ்ரீ பாஷ்யத்திற்குப் பெருமதிப்பு விளைந்தது. பதரிகாச்ரமமெழுந்தருளி மீண்டு ஸ்ரீ ஜகன்நாத ஸ்ரீ கூர்மாதி க்ஷேத்ரங்கள் ஸேவித்தது. திருமலையில் சென்று திருவேங்கடமுடையானுடைய ஸ்ரீ மஹாவிஷ்ணுத்வத்தை ஸ்தாபனம் செய்தருளித் திருவரங்கம் மீண்டது. கூரத்தாழ்வானுக்குப் பெரிய பெருமாள் திருவளை ப்ரஸாதமநுக்ரஹித்தது. ஆழ்வானுடைய திருக்குமாரர்களுக்குப் பராசரபட்டரென்றும் வ்யாஸ பட்டரென்றும் திருநாமத்தை ஸ்வாமி சாத்தியது. எம்பாருடைய திருத்தம்பியாரின் திருக்குமாரருக்குப் பராங்குசநம்பி யென்று திருநாமம் சாத்தியது.

ஒன்பதாவது ஸ்தபகத்தில்:—வீர சைவனான சோழராஜன் ஸ்வாமியைத் தன்னிடம் வர வழைக்க முயன்றது. பெரிய நம்பியும் கூரத்தாழ்வானும் ராஜஸபைக்கு எழுந்தருளினது. அங்கு அரசன்சொற்படி செய்யாத நம்பிக்கும் ஆழ்வானுக்கும் திருக்கண்ணைப் பிடுங்க அரசன் கட்டளையிட்டது. ஆழ்வான் தாமே தமது திருக்கண்களைப் போக்கிக் கொண்டது. பெரிய நம்பிகள் நேத்ரோத்பாடன க்லேசத்தினால் அங்கேயே பரமபதித்தது. ஸ்ரீராமாநுஜர் வெள்ளை சாத்திக்கொண்டு மேல்நாட்டுக் கெழுந்தருளினது. யாதவாத்ரி யென்கிற திருநாராயணபுரத்தில் திருநாராயணப் பெருமாளைத் திருப்ரதிஷ்டை செய்வித்தருளினது. டில்லிக்கெழுந்தருளி ராமப்ரிய ரென்கிற உத்ஸவ மூர்த்தியைக் கொணர்ந்தது.

பத்தாவது ஸ்தபகத்தில் :- டில்லிராஜன் மகளுடைய ராமப்ரிய விக்ரஹ விரஹக்லேசத்தை வருணித்தல், அம்மகளை வரவழைத்து ராமப்ரியரை ஸேவிக்கச் செய்தருளினது. மஹாபாரதியான க்ரிமிகண்டசோழன் புழுத்து மாண்டானென்று செய்திபெற்றது. அந்தசோழனுடைய புதல்வன் ஸ்வாமியைக் கோயிலுக் கெழுந்தருளப் பிரார்த்தித்தது. ஸ்வாமி கோயிலுக் கெழுந்தருளின பின் கூரத்தாழ்வான் வந்து சேருதல். எம்பெருமானார் ஆழ்வானுடன் தேவப் பெருமாளை ஸேவிக்க வெழுந்தருளி வரதராஜ ஸ்தவத்தை விஜ்ஞாபிக்கச் செய்தருள ஆழ்வான் திருக்கண் பெற்றது மீண்டும் கோயிலேற வெழுந்தருளி அங்கு வாழ்ந்தது

"ஸ்ரீ சைலபூர்ண — ஸ்ரீ மஹாபூர்ணாதி ஸ்வாசார்யதநுபவாந் சங்கசக்ராங்கந பூர்வகம் அதிகததர்சநரஹஸ்யாந் விதந்வந் ஸாதுஜநமாந்ய: ஸ்ரீரங்கராஜதாம்ந்யேவ சிரமுவாஸ." என்று க்ரந்தம் தலைக்கட்டப்பட்டுள்ளது. ... ... ... ... *

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

## இதைக் குறிக்கொண்டு காணவேணும் அனைவரும்

இவ்விதழின் முதற் பக்கத்திலும் இரண்டாம் பக்கத்திலும் மறுபடியும் கண் செலுத்த வேணும். நிகழும் நள வருஷத்தில் திருமங்கையாழ்வாருடைய திருவவதாரமென்பது பற்றி அந்த ஆழ்வாருடைய ஆறு திவ்யப்பிரபந்தங்களையும் பதவுரையோடு கூட அச்சிட்டு ஒரே ஸம்புடமாக வெளியிட உத்தேசித்து. துரிதமாக அச்சிட்டு வருகிறோமென்பதை மீண்டும் தெரிவித்துக்கொள்கிறோம். இதற்காகும் செலவின் பொருட்டு ஒன்று நிச்சயித்திருக்கிறோம். (அதாவது) நம்முடைய பதிப்புகளில், (1) திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகையுரைகளைப் பூர்த்தியாகவும், (2) முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீ வசநபூஷணம், ஆசார்ய ஹ்ருதயம் - இந் நான்கு ரஹஸ்யங்களும் மணவாள மாமுனிகளின் வியாக்கியானங்களைப் பூர்த்தியாகவும், (இவற்றுக்கு) நம்முடைய ஸாரார்த்த தீபிகையைப் பூர்த்தியாகவும், (3) முகுந்தமாலை முதல் நக்ஷத்திரமாலிகை வரையில் ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் நாமெழுதியுள்ள உரைகளைப் பூர்த்தியாகவும், (4) நமது உபந்யாஸ நூல்களைப் பூர்த்தியாகவும் வாங்க விரும்புமவர்களுக்கு — விலையில் நூற்றுக்கு முப்பது ரூபாய் கமிஷன் கழித்துக் கொடுப்பதாக நிச்சயித்திருக்கிறோம். மேலே குறித்த நான்கு வகுப்பு நூல்களையும் வாங்க வேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. அவரவர்களுக்கு இஷ்டமான வகுப்பில் வாங்கலாம். இந்த நிபந்தனை 5—12—76 தேதி வரையில் மட்டுமே.

இப்படிக்கு பத்திராதிபர்

*P. B. A.*

என்னும் பதிகத்தில் ஒரு பாசுரத்திற்கு ஈடாகாதே; ஓரடிக்கு ஈடாகாதே. ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் கண்ணன் வெண்ணெயமுது செய்தானென்கிற பேச்சே யில்லையே. "கண்ணன் தின்னும் பண்டம் என்ன? கண்ணன் தின்னும் பண்டம் வெண்ணெய்" என்னும் சிறுவர்களின் மழலை மென்மொழிகூட மஹர்ஷிகளின் செவியில் விழுந்ததில்லையே.

இப்போது நடைபெறுவது நளவருடம். முன்னம்சென்ற பிரமாதீச வருஷத்தில் [அறுபத்திரண்டாண்டுகட்குமுன்பு] கோயில் நிகழ்ச்சியொன்று கேளீர். திருவத்யயநோத்ஸவம் முதல்நாளில் அரையர் ஸேவையில் 'வெண்ணெய் விழுங்கிப் பதிகத்தோடு சாற்று 'ஆற்றிலிருந்து பதிகம் மறுநாள் தொடக்கம். முதல் நாள் 'வெண்ணெய் விழுங்கிப் பதிகம் சாற்றும்போது அரையர்கள் நால்வர்

"வண்டுகளித்திரைக்கும் பொழில்சூழ்வருபுனற் காவிரித்தென்னரங்கன்
பண்டவன் செய்த கிரீடையெல்லாம் பட்டர்பிரான் விட்டுசித்தன் பாடல்"

என்னுமிரண்டடிகளைப் பெருமிடறுசெய்து ஸேவித்து உள்ளெலாமுருகிக் குரல் தழுத்தொழிந்து பின்னடிகளை ஸேவிக்கமாட்டாதே கண்ணநீரோடே தெண்டனிட்டெழுந்தருளினார்கள். எமுனைக்கரையில் கண்ணன்செய்த கிரீடையெல்லாம் வருபுனல்காவிரிக் கரையில் தென்னரங்கன் செய்ததாகப் பேசினவத்தால் பாடுவார்கண்ணில் காவிரிப்புனலும் கங்கைப்புனலும் பெருகாதிருக்குமோ?

---

கூரத்தம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# இராமானுசன் கருணை.

(ஸ்ரீமதுபயவே D. ராமஸ்வாமி ஐயங்கார், அட்வகேட், சென்னை.)

"காரேய் கருணையிராமானுச! இக்கடலிடத்தில்
ஆரேயறிபவர் நின்னருளின் தன்மை?"

என்று திருவரங்கத்த முதனாரே கை வாங்கிய ஒரு விஷயத்தில் மிக அல்பமதியான யான் இழிவது ஸாஹஸத்தினும் ஸாஹஸமே, இருப்பினும் 'என்மனம் ஏத்தியன்றி ஆற்றகில்லாது' என்று அவ்வமுதனார்பணித்தபடி ஆசைபற்றி யறைய முற்பட்டு இராமானுச முனிக்கன்பு செய்யும் சீரிய பேறுடையார் செஞ் சொற்கள்கொண்டு சில வரைய முன் வந்துள்ளேன்.

"கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவே" என்று பிராட்டியால் போற்றப்பட்ட ஸ்ரீராமாவதாரம்போல் ஸ்ரீராமானுஜாவதாரமும் "அனைத்துலகும் வாழப்பிறந்த"தொரு அவதார விசேஷம். இராமானுசன் மெய்யடியார்கள் ஒவ்வொருவரும் அமுதனாரைப்போல் "முழுதுணர்ந்த அடியர்க்கமுதம் இராமானுசன் என்னை யாளவந்திப்படியிற் பிறந்தது; மற்றில்லை காரணம் பார்த்திடிலே" என்றபடி எனக்காகத்தான் இராமானுசாவதாரம், எனக்காகத்தான் இராமானுசாவதாரம்" என்று பேசி யின்புறவமையும். அத்துணை எளிமையும் நீர்மையும் பொருந்தியுள்ளது இராமானுசனிடத்து; அதுகொண்டுதான் ஆழ்வான் "தலையசைந்து" என்று பாராட்டியது.

"உள்நின்றுயிர்களுக் குற்றனவே செய்து, அவர்க்கு உயவே பண்ணும் பரனும் பரிவிலனும்படி" யன்றோ இராமானுசன் நம்பால் அருள்பாவிப்பது! "சிந்தையினோடு கரணங்கள் யாவும் சிதைந்து முன்னாள் அந்தமுற் றாழ்ந்தது கண்டு" அவைகளை நமக்கு அன்று (ஸ்ருஷ்டி காலத்தில்) "அருளால் தந்த அரங்கனும் தன்சரண் தந்திலன் தானது தந்து எந்தை இராமானுசன் வந்தெடுத்தனன் இன்று என்னையே" என்று நாம் ஒவ்வொருவரும் பேசிக்களிக்கும் வகையில் நமக்குக் கருணை புரிந்து நிற்பது இராமானுசனேயன்றோ? இந்த 69ஆம் பாசுரத்துக்குப் பெரிய ஜீயர் உரை வெகுரஸம். "கரணங்களைத் தந்தவோபாதி தம்முடைய சரணங்களைத் தந்திலர்; எம்பெருமானார் எனக்கு ஜநகராய்க்கொண்டுவந்து" அரங்கன் செய்யதாளிணையோடார்த்தான்" என்னும்படி தாம் அந்தத் திருவடிகளைத் தந்தருளி ஸம்ஸாரார்ணவ மக்நனான என்னை எடுத்தருளினார். இது ஒரு உபகாரமே!"

இப்படிப் பல பல அனுபவங்களை வாரி வழங்குகிறார் அமுதனார்.

அவரை அடியொற்றி ஸ்வாமி தேசிகனும் எம்பெருமான் கருணையைக் காட்டில் எம்பெருமானார் கருணை மிகமிக மேம்பட்டது என்று சாட்டியருளுகிறார். எம்பெருமான் தயையைப் பாராட்டும் தயாசதகத்திலிருந்து ஒரு சுலோகத்தையும், எம்பெருமானார் தயையைப் பாராட்டும் யதிராஜ ஸப்ததி சுலோகமொன்றையும் ஒப்பிட்டுப்பார்த்தால் சீரியதொரு பெருமை எம்பெருமானார் தயைக்கே உளது என்று உணரலாம். தயாசதகசுலோகம் பின்வருமாறு.

"பராசர முகாந் வந்தே பகீரதநயே ஸ்திதாந் |
கமலாகாந்த காருண்ய கங்காப்லா விதமத்விதாந் || 455

ஸ்ரீநிவாஸனுடைய தயையாகிற கங்கை நம்போல்வார்களை நனைக்கும் வண்ணம் பகீரதனுடைய நிலையில் நின்ற பராசரர் முதலிய ரிஷிகளை வணங்குகிறேன்-என்று இதன் பொருள்.

யதிராஜ ஸப்ததியின் 60-வது ச்லோகம் பின்வருமாறு:

"ஸவித்ரீ முக்தாநாம், ஸகலஜகதேந: ப்ரசமநீ
கரீயோபிஸ் தீர்த்தை ருபசிதரஸா யாமுநமுகை: |
நிருச்ச்சேதா நிம்நேதரமபி ஸமாப்லாவயதி மாம்
யத்ருச்சாவிக்ஷேபாத் யதிபதிதயாதிவ்யதடிநீ ||

எம்பெருமானுடைய தயையும் கங்கைதான்; எம்பெருமானாருடைய தயையும் கங்கைதான் (திவ்யதடிநீ), ஆனால் அவற்றுக்குள் எவ்வளவு நெடுவாசி! எம்பெருமானுடைய தயை நம்பால் பெருகி நம்மை நனைப்பதற்குப் பராசராதி மஹர்ஷிகள் பகீரத ப்ரயத்தினம் செய்யவேண்டி வந்தது. ஆனால் யதிராசனுடைய தயை யத்ருச்சாவிக்ஷேபாத். தனது யாத்ருச்சிகமான தெறித்தலாலே நம்மை முழுக அடிக்கிறது. ப்லாவனம்—ஸமாப்லாவனம். முதலது பெருமாள் தயை, நனைத்தல் மட்டும் செய்கிறது, இரண்டாவது ஸமாப்லாவயதி = முழுகச் செய்கிறது. இவ்வளவுதானா வாசி? இல்லை. பெருமாள் தயை மேலிருந்து கீழே ப்ரவஹிக்கிறது. இது நீருக்குஸஹஜம்; உடையவர் தயை மேட்டில் ஏறுகிறது.

"நிம்நேதரமபி மாம் ஸமாப்லாவயதி="

நான் அஹங்காரத்தால் இறுமாந்து உயர இருந்தாலும் என்னையும் முழுக்காட்டி விடுகிறது, உடையவர்தயை. இப்படிச் சொல்லாமற் சொல்லி உடையவர் தயையை மேம்படுத்திப் பேசுகிறுர் தேசிகன்.

அருளாளனுக்கு அருள் எங்கிருந்து வந்தது? உடையவரிடமிருந்துதான். இதுவும் வெகு ரஸமாக யதிராஜ ஸப்ததியில் பார்க்கப் படுகிறது. 62-வது ச்லோகத்தின் பிற்பாதி பின்வருமாறு:

"சுத்தம் யேந தயாஸுதாப்புநிதிநா
பீத்வா விசுத்தம் பய: காலே ந: கரிசைல
க்ருஷ்ண ஜலத: காங்க்ஷாதிகம் வர்ஷதி"=

உடையவராகிய தயா ஸாகரத்தில் புக்கு முகந்துகொண்டு கரிசைலமெனும் மலை மீது ஆர்த்தேறி வரதனெனும் கார்மேகம் தகுந்த காலங்களில் நமக்கு நாம் விரும்புவதற்குமேல் அருளைப் பொழிகிறது. "இக்கடலிடத்தில் யாரே அறிபவர் நின்னருளின் தன்மை"? என்று அமுதனுர் எழுப்பிய வினுவுக்கு இங்கே விடைதரப் படுகிறது. ஸர்வஜ்ஞனை அருளாளன்தான் அறிவான் என்று பதில் கிடைக்கிறது.

'இராமானுச! இனியுன் சீரொன்றிய கருணைக்கு இல்லைமாறு தெரிவுறிலே'.

---

# The Wrong Equation-A Misconceived Parity.

*(S. SATYAMURTI AYYANGAR, Gwaliar.)*

A deep and dispassionate study of the Vedas will reveal that Lord Narayana, also known as Vishnu, Vasudeva, Rama, Krishna etc., is the Supreme God, with none equal to or above Him. In XV-15 of Bhagavad Gita, Lord Krishna has said that the Vedas in their entirety, reflect Him. (Vedaischa sarvairahameva vedyah). The position, in this regard, has been made abundantly clear, in the hymns of the Alvars, collectively known as 'Divya Prabandham' and placed beyond the shadow of a doubt. Actually, the Alvars, one and all, took utter refuge at the feet of Lord Narayana, the Consort of Mahalakshmi, their heart was the Sanctum of Narayana, their eyes saw everywhere, in all, in every event Narayana and their hands worshipped Narayana with choice flowers. As a Master, Father, Friend, Beloved and so on, they loved and adored Narayana. In short, they got dissolved in him, like milk, honey, sugar-candy and porridge. In that scintillating hymnal, Tiruvaymoli, Nammalvar dwelt on the supremacy of Lord Vishnu, in His 'Para' (transcendent) and 'Vibhava' (Incarnate) aspects, in the first decad (Tiruvoymoli) of the first centum and the second decad of the Second Centum, respectively. He then proceeded to establish His supremacy in 'Arca' (Iconic) aspect, as well, in the concluding decad of the fourth

centum, where the Alvar shakes off the stupor of the votaries of the minor deities, exhorts them to concentrate on the Supreme God, the one and only God and calls upon them to worship the Lord. in His iconic form enshrined in Kurukur, the Alvar's birth place. This being the case. it would be grievously wrong even to suggest and much less, make a daring statement that the Alvars adored alike, Brahma. Vishnu and Siva and treated them all, on a par Sometime back, an elderly Smartha gentleman, who reviewed a book on Nammalvar, even went to the extent of saying that the Alvar attained salvation only through his propitiation of all the three members of the Trinity, Brahma. Vishnu and Siva, for whom he had the same degree of reverence and cited, in support, the opening song of the very last decad (X-10-1) of Thiruvaymoli. This is obviously due to his utter ignorance of the subject, like many other superficial readers, without the requisite background, who tear, out of context, a few songs, here and there and misinterpret them, thereby confusing the minds of the lay public. In a recent book-review, which appeared in "Sri Ramanujan-338", the Editor has thrown adequate light on the subject, by way of clearing the possible misconception in the minds of the unfortunate readers, who might peruse the book in question, 'Tirumaladiyar' strangely enough, by a Vaishnavite author, a bundle of contradictions and a tissue of mis-statements, hardly worth the notice of one of the Editor's rank and eminence and much less, a review from his erudite pen. Besides touching upon a few salient points, in the said review, the major portion of this essay will concentrate on 'Tiruvaymoli', by way of reinforcing the Supremacy of Lord Vishnu, to the extent possible. in the brief compass.

2. An oft-repeated slogan as it were, in the aforesaid book (Tirumaladiyar) is "Ari (vishnu) and 'Aran' (siva) are one and the same or are of identical greatness and importance". The misguided author could, of course, be left severely alone, had he not sought to support this fantastic statement of his, by citing, rather misquoting, the hymns of the Alvars, betraying his colossal ignorance of their contents Poykai Alvar, the first of the Alvars, in the chronological order of their advent, has declared his exclusive allegience to Tirumal (Vishnu), in stanza 64 of his 'Mutal Tiruvantati' and earlier, in stanza 15, he has stated unequivocally that, of the Trinity, the cloud-hued Vishnu is the Sovereign Master of all. The author of the book in question has quoted these stanzas all right and given out their meanings also, as above. But he gets into a sudden aberration and quotes stanza 5 of the same hymnal, to support his favourite stand of parity between 'Ari' and 'Aran' and goes to the absurd length of presenting Poykai Alvar as self contradicting and muddle-headed, demonstrating, in the said song, the perfect identity of the

two gods and setting the pace for thinking along these lines, by the Vaishnavites Far from establishing the identity of Vishnu and Siva, the song in question actually stresses the vast disparity between them. on various counts, viz., name, mount texts proclaiming their respective greatness, place of residence, activity, weapon and form, establishing the overwhelming superiority of Vishnu over Siva and even stating that the latter constitutes the body of the former. Stanza 74 ibid, is also pitched in the same key, where it has once again been pointed out that Siva, with matted locks, the insignia of an 'upasaka' is but the ward of Vishnu, wearing the long crown, the symbol of His Sovereignty, under the latter's benevolent protection. The author cites stanza 63 of the hymnal of Peyalvar to prove that he also subcribes to the parity between Vishnu and Siva. Actually the purport of this song is that Lord Venkatesa, enshrined in Tiruvenkatam is Tirumal. who had once presented on His person, the twin aspect of Sankara and Narayana–the Sankara Narayana. The bewildered author is probably not aware that Tondaradippodi Alvar has emphatically stated, in stanza 7 of 'Tirumalai':

"Sire! He alone is the supreme Deity, whose severe
bow routed Lanka, this is the absolute truth, you see......"

All the other Alvars have also pin-pointed Tirumal's overlordship and it is, therefore, a genuine exercise in futility to seek support from the Alvars for the author's fantastic slogan.

8. In reply to a query, supposed to have been put to him, by the people around, as to whether the Trinity standing in a row, Brahma, Vishnu and Siva, are of the same stature or one of them is superior to the other two or there is yet another power, superior to all the three, Nammalvar has furnished the reply in three stanzas, in a row, Tiruvaymoli I-3-6 to 8 as follows:

"Ye folks! better study dispassionately the authoritative texts highlighting the individual traits and course of conduct of Lord Narayana (Vishnu) Brahma and Rudra and in the process, fix your mind finally on whosoever impresses you as the Supreme Lord and worship him by reciting His names and the relative mantras. Such a study will easily reveal that Narayana is the internal controller of all, including Brahma and Rudra, that He is wholly Satvik, while the other two have a blend of 'rajasik' and 'tamasik' traits, so on and so forth;

May you study, dispassionately, the authoritative texts and discern that there is but one God and that is Narayana, the Super-soul, residing in all, including Brahma and Rudra. With this knowledge, you will do well to attach yourselves firmly to Narayana, during the rest of your life-time;

If we cleanse our minds of the dirt of misconceived notion of parity among the 'Tirumurtis' through that bleaching agent, called wisdom, and worship daily at the benevolent feet of our Lord, the gracious consort of Mahalakshmi, all our past sins which had been tormenting us, so far, will die out at once, and we will be free from wants of any kind It is never too late to switch on to the Lord thus; better repose on his lap, even while dying."

4. One of Lord Vishnu's several names is 'Ananta', the endless. He is limitless and immeasurable, not being circumscribed by space and time. The unique feature about the supreme Lord is that He is not only not circumscribed by space and time but He also abides in all, without any exception, the sentient beings and the non-sentient things constituting, as it were, His bodies. It is this immense ubiquity of the Lord, in various forms, that the Alwar refers to every now and then and there is, therefore, no meaning in His being equated with the things and beings pervaded by Him including Brahma, Rudra and other exalted devas. Elaborting this theme in Tiruvaymoli III centum, fourth decad the Alvar says in the eigth verse.

"Could I call Kannan, my Liege-Lord of wondrous traits and deeds,
Sporting the floral garland of tulaci, which honey sheds.
Who the worlds did with delight create and is by them adored,
As the lustrous One of sapphire hue or as Siva, who sports
The cool, crescent moon on matted locks and stands revered
[By his votaries] as the god supreme or as Nanmukan, (Brahma, the four-headed)?

Here, the Alvar points out that Siva, mistakenly revered by some, as the Supreme and Brahma, the four-headed, also form part of Lord Vishnu's possessions. Actually, these deities derive all their powers from Lord Vishnu, vide I-1-5, Tiruvaymoli. Again, in spite of their internal bickerings, these deities join together, in the face of a common danger and propitiate Lord Vishnu, in a body. The Alvar, therefore, advises in Tiruvaymoli IV-10-7, to seek refuge at the feet of Lord Adinatha, enshrined in Kurukur, with firm faith. It is worth while reproducing here all the verses, in this decad and yet, for the sake of brevity, just one verse (IV-10-5) is mentioned here, to drive home the point. Being self-explanatory, further comment is needless.

"Ye hardened perverts, led away by stories about Ilinkam,
Jains, Buddhists, heretics, one and all! You see, the Lord Supreme,
Internal Controller of you and your deities, Polintuninrapiran does gloam
In Tirukkurukur, with paddy fields rich; better worship Him,
There isn't any untruth at all, in what I proclaim.

5. In Tiruvaimoli, VII-9-2, Nammalvar says that he was but the Lord's mouthpiece to repeat the words dictated by Him and still he was glorified by Him, as the great Author of the grand hymnal. Elucidating this further, the Alvar says that Lord Vishnu does precisely the same thing. in the case of the minor deities; Brahma is made to appear as the Creator of the worlds, while Siva is made to appear as the great destroyer of Tirupura (the three flying citadels) and so on, in respect of acts actually performed by the Lord, as their internal controller. The Lord, being the primate, the first and foremost, discharges the cosmic functions through Brahma, Rudra, Indra and the whole hierarchy, standing within them all as their internal controller. In dire contrast with Vishnu's magnanimity, the lesser gods, when propitiated, grant men their desires, but side by side, envy rankles in the hearts of the former over the latter's mounting stature and they seek an opportunity to pull the votaries down, to prevent their drawing level with those very gods. an unforgettable lesson from h: episode of king Yayati. As regards Lord Vishnu's supreme control over all the three functions of emanation sustenance and dissolution see also Lord Krishna's declaration in sloka 20 of chapter X of Bhagavad Gita This can easily disabuse one of the wrong notion that Vishnu is but a co-functionary on a par with the other two functionaries, Brahma andRudra.

6. Reverting to the grossly misunderstood opening song of the very last decad of Tiruvaymoli (X-10-1) mentioned in passing, in para 1, the exact import of the song is given below:

The Lord is addressed in this song, as 'Muni', the sage, who contemplates and conceives the projects pertaing to the creation of the universe, its sustenance and dissolution and gets the work of creation and dissolution, discharged by Brahma and Rudra, respectively, permeating their souls as the Internal Controller. There is absolutely no question of parity among Brahma, Vishnu and Rudra and, at any rate, the Alvar would be the last person to think in terms of such parity and muchless, throw the slightest hint or suggestion to this effect. Seeing that he has already expounded the supremacy of Lord Vishnu, in I-1, II-2, II-8 & IV-10. If the Lord has been addressed in this song as "Oh, fou -headed Brahma!", "Oh, triple-eyed Rudra!" it only connotes the body-soul relationship of the Lord and His subjects, the entire universe and all beings therein constituting, as it were, His bodies, Himself pervading them all, as the Inner Controller, the Super-soul. c f also VI 9-1 of Tiruvaymoli, where the Alvar has referred to the Lord, as pervading the five elements, Sun and Moon, Siva and Brahma as the Inner Controller of them all.

7. Dealing with the age of the Alvars towards the end of the book in question, the author endorses with an aura of judgement, the views of

Dr. Irasamanickkanar Swami Chidambaranar Purnalingam Pillai, M Raghava Iyengar and other research scholars, who have fixed the age of the Alvars between the 7th and 9th century, A. D At the same time, the author seems to be quite aware of the traditional view, as set out by Manavala Mamuni in stanza 4 of his 'Upadesa Ratnamalai' as this has been referred to, in the introduction. The attention of the reader is, however, invited to the essay on the subject from the mighty pen of Sri P. B A Swamy, a great boon indeed to the adherents of the traditional school and Research Scholars alike. An English version of this profound dissertation, supplied by this writer, appeared in 'Sri Ramanujan—209'. A dispassionate study of the said essay will surely provide the Research Scholars the necessary perspective and thereby alert them to the dire necessity for a drastic rethinking and a thorough re-orientation of approach to this hallowed theme.

## — ஸ்ரீநிருஸிம்ஹப்ரியாவில் —

திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் நமது பரமாப்தரான ஸ்ரீமது பயலே. வித்வான். வி. நாராயணையங்கார் ஸ்வாமி 5—10—76-ல் அருளிய திருமுகத்தில் எழுதியிருப்பதாவது —"புரட்டாசி மாதந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையில் திருக்கண்ணங்குடி திவ்யதேஶ அநுபவபரமான ஒரு வியாஸம் வெளிவந்துள்ளது, இதை யெழுதியவர் தேவரீரிடத்தில் பலகால் பங்கப்பட்டு விச்ராந்தரான ஒரு வ்யக்திவிசேஷமென்று தெரிகிறது. அந்த வியாஸத்தை தேவரீர் கடாக்ஷித்திருக்கலாமாகையால் அடியேன் சுருக்கமாக விஜ்ஞாபிக்கிறேன்;—"......இப்படியிருக்க ஸ்ரீதேசிகனை அஸூர்துர்யர், ஹிநத்ருஷ்டாந்தம் கொடுத்தாரென்று ஸ்ரீவைஷ்ணவ ஸமயாசாரத்தில் எழுதிய தூஷணம ஆழ்வார் விஷயத்திலும் முடிந்தது. வக்தாவுக்கே தோஷமாம். ஆகையால் ஸ்ரீதேசிகன் அருளிச் செய்ததெல்லாம் பூர்வாசார்யஸம்மதமே." என்றெழுதியுள்ளார். இது அடியேனுக்கு நன்றாகப்புரியவில்லை. ஸ்ரீராமாநுஜன் மூலமாகத் தெளிவிக்கும்படி பிரார்த்திக்கிறேன்—" என்று.

சுருக்கமாகத் தெரிவிக்கிறேன். ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா மாதந்தோறும் எனக்கு வருவதுண்டு. ஆனால் நேத்ரசிகித்ஸகருடைய வலிதான கட்டளையினால் வாசிப்பதில்லை. ஆவச்யகமான விஷயங்களை வாசித்துக் காட்டுவோர் பக்கல் கேட்பதுமுண்டு. அஸம்பத்தப்ரலாபங்களைக் காண்பதுமில்லை, கேட்பதுமில்லை. ப்ரக்ருதம் இரண்டே வார்த்தை. 'ஏரணிகீர்த்தி யிராமாநுசமுனி யின்னுரை சேர், சீரணி சிந்தையினோம் சிந்தியோமினித் தீவினையே' என்றருளிச்செய்தவர் ஸ்வாமி தேசிகன். அவர் ஹஸ்திகிரி மாஹாத்மியப்பிரபந்தத்தில் "தொண்டைமண்டல வேதியர் வாழுவே' என்று முன்னம் ஸாமாந்யமாக வருளிச் செய்து, உடனே அதைத் தாமே விவரித்தருள்பவராய் "நூற்றந்தாதி நவின்றார் வாழியே" என்று விசேஷித்துப் பாசுரத்தை முடித்தார் இங்ஙனே தென்கலையார்களை வாழ்த்தியருளின ஸ்வாமி தேசிகனை தூஷிப்பவருளரேல், அன்னவர்களை 'என்னுடையபேதெல்லாம் இனியவாறே' என்றிருப்போம். நாம் தேசிகன் சாதித்தருளினதெல்லாம் பூர்வாசார்யஸம்மதமே.



—P. B. A.

# ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாளுடைய கஜேந்திராழ்வான் திருமண்காப்புத் தீர்ப்பு

I

## திருவல்லிக்கேணியில் பாராட்டுவிழா

**(A. ராமானுஜாசாரி, B A., 63 பெருமாள் கோவில் தெரு, சைதை, சென்னை–15)**

எம்பெருமானார் ஸ்ரீபாஷ்ய—கீதாபாஷ்ய க்ரந்தங்களில் இதரருடைய வியாக்யானத்தில் காணப்படும் அபார்த்தங்களைக் கண்டித்துள்ளார்; ஆனால் அவர்களை மறைமுகமாகக்கூட இழிவாகவோ, ஏளனமாகவோ, குறைத்தோ எழுதவில்லை. இதேமாதிரி ஸ்ரீமணவாள மாமுனிகளும் நம் பூர்வாசார்யர்களுடைய கொள்கைகளுக்கோ அல்லது வியாக்யானங்களுக்கோ மாறுபட்டு எழுதிய சிலரை அவர்கள் எழுதியது சரியல்ல என்று சாதித்து எது சரியானது என்பதைக் காட்டியுள்ளாரே யொழிய அவர்களைத் தாழ்த்தி யாருடைய மனமும் புண்படும்படியாகக் குறிப்பிட வில்லை இம்மஹாசார்யர்களுடைய அடியை யொற்றி நம் ஸ்ரீவைஷ்ணவ உயர்ந்த பண்புக்கு எடுத்துக்காட்டாக அமைந்தது 26-9-76 ஞாயிற்றுக்கிழமை திருவல்லிக் கேணி தென்னாசார்ய சம்பிரதாய சபையின் ஆதரவில் நடந்த ‘தேவப்பெருமாள் யானை திருமண்கேஸ் தீர்ப்பு’ பாராட்டுவிழா.

கீழ்க்கோர்ட்டுகளிலிருந்து உயர்நீதிமன்றம்வரை யானைக்குத் தென்கலைத் திருமண்காப்புதான் சாத்தவேண்டும் என்ற தீர்ப்பை சமீபத்தில் ஹைகோர்ட் ஸ்பெஷல் பெஞ்சும் ஊர்ஜிதம் செய்தது யாவரும் அறிந்ததே. தினசரி பத்திரிகைகளெல்லாவற்றிலும் விரிவாகப் பிரசுரமாகியுள்ளது. இந்த வழக்கு நூறு வருஷங்களுக்கு மேலாகவே நடந்து வந்திருக்கிறது. சரித்திரபூர்வமான இந்த வழக்கில் இரவும் பகலும் பல புராதன ரிகார்டுகளை ஆராய்ந்து நியாயாலயங்களில் வாதாடி பேரருளாளன் சன்னிதியில் நமக்குள்ள பாத்யதைகளை காப்பாற்றிக் கொடுத்த வழக்கறிஞர்களை, முக்கியமாக ஸ்ரீமான் உ. வே. V. N. வெங்கட வரதாசார்யஸ்வாமி, அவர் துணைஅட்வகேட் ஸ்ரீ ஸ்ரீசைலம் அய்யங்கார், இன்னும் ஸ்ரீமான்கள் K. E. ராஜகோபாலாசாரியார், G. கிருஷ்ணமாசாரியார், P. B. அனந்தாசாரியார் இவர்களையும், இவ்வழக்குக்காகப் பல வருஷங்களாகப் படாதபாடுபட்ட ஸ்ரீமான்கள் காஞ்சி நல்லப்பா, ஜீயப்பங்கார், V. P. நரசிம்மாச்சாரியார், இவ்வழக்கிலேயே தன் வாழ்நாள் பூராவையும் கழித்த காலம்சென்ற ஸ்ரீமான். உ. வே. T. T. பாஷ்யமய்யங்கார் அவர்களையும் பாராட்டவும் அவர்களுக்குத் தங்கள் கிருதஜ்ஞதையைத் தெரிவிக்கவும், திருவல்லிக்கேணி தென்னாசார்ய சபை இக்கூட்டத்திற்கு ஏற்பாடு செய்தது. ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் ஞான வயோவருத்தராய் எழுந்தருளியிருக்கும் மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீமான். உ. வே. பர. ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி இந்த விழாவுக்குத் தலைமை வகித்தது சாலப் பொருந்தும். இவ்விழா நடந்த வானமாமலை மடத்தில் எள்ளு போட்டால் எள்ளு விழாது என்னும்படி அவ்வளவு பெருந்திரள் கூடியிருந்ததைக் குறிப்பிடவேண்டும்.

மேலும் இதில் பெரிய அளவில் இளைஞர்கள் கலந்துகொண்டதை சம்பிரதாயத்திற்கு ஒரு நல்ல சுப சூசகமாகக் கொள்ளலாம். கூட்டத்தில் மேற்சொன்ன வழக்கறிஞர்களைத்தவிர முன்னாள் ஜட்ஜ் உயர்திரு கிருஷ்ணசாமி ரெட்டியார், அட்வகேட் ஸ்ரீ சம்பகேசய்யங்கார், R. V. ஸ்ரீ சேஷாத்ரி ஐயங்கார் போன்ற பல

பெரியோர்களும் பிரசன்னமாயிருந்தனர், கூட்டம், ஸ்ரீமான். உ. வே. காவற்சேணி அனந்தாசார்ய ஸ்வாமியின் திவ்யப்பிரபந்த இறை வணக்கத்துடன ஆரம்பித்தது. தென்னுசார்ய சபையின் தலைவர் அட்வகேட் ஸ்ரீமான் வீரராகவாசாரியார் சபையின் நோக்கத்தை விளக்கினுர். அடுத்தபடியாக, ஸ்ரீ பெரும்பூதூர் முதலிய சன்னிதிகளிலிருந்து வந்த பெரிய மாலேசளே இவ்வழக்கில் முகிய பங்கெடுத்துக் கொண்ட மேலே குறிப்பிட்ட வழக்கறிஞர்களுக்கும் பெரியோர்களுககும ஸ்ரீமான் அண்ணங்கராசாரியர் சாத்தி, பொன்னுடை போர்த்தி ஸதஸ்ஸின் கரகோஷத்துடன் கௌரவித்தார். P B A. ஸ்வாமி தம் தலைமையுரையில் அட்வகேட் வேங்கட வரதாச்சாரியாருடைய நுண்ணறிவு, 'ப்ரதிபா' முதலிய ப்ரபாவங்களேப் பரக்கப் புகழ்ந்துபேசி மேலும் சொன்னுர். "அவருடைய பெரு முயற்சியால் தான் கோயில் திருமலே பெருமாள்கோவில் சன்னிதிகளில் நமக்குள்ள பாத்யதைசள் காக்கப்பட்டன. பலகாலமாக நம் வரதனுடைய கஜேந்திரன 'நாராயணு ஓ! மணிவண்ணு நாகணையாய்! வாராய் என் ஆரிடரை நீக்காய்!' என்று வாய்விட்டுக் கதறினதை எம்பெருமான் திருச்செவிசாய்த்து ஸ்ரீ வெங்கடவரதாச்சார் மூலமாக அதன அல்லல்களே தீர்ததுவைத்தார். ஸ்ரீவெங்கடவரதாச்சார்யர் வயோவ்ருத்தர் சமீபத்தில் திருமேனி பாங்கில்லாமலிருந்தது. பல இன்னல்களுக்கு நடுவேயும சம்பிரதாய நன்மையையே லட்சியமாகக்கொண்டு வழக்கை வெற்றிகரமாக நடத்தி அழியாப்புகழுக்குப் பாத்திரமாயுள்ளார்" என்ருர். மேலும் இவர் ப்ரபாவங்களேக் கொண்ட இரண்டு தமிழ் வெணபாக்களேயும் மூன்று சமஸ்கிருத ச்லோகங்களேயும ஸ்ரீ அண்ணங்கராச்சாரியார் ஸதஸ்ஸில் சமர்ப்பித்து விளக்கிக்காட்டி, அவைகளேத் தம் திருக்கையாலெழுதிய ஸ்ரீ பெருந்தேவித்தாயார்—பேரருளாளன்" பெரிய புகைப்படம் ஒன்றையும் வெங்கடவரதாச்சாரியாருக்கு அளித்து கௌரவித்தார். பிறகு இவ்வழக்கில் வேங்கடவரதாசாரியாருக்குத் துணைபுரிந்த ஸ்ரீ ஸ்ரீசைலம் அய்யங்காரையும் புகழ்ந்து மங்களாசாஸனம் செய்தார். ஸ்வாமி மேலும் பேசுகையில் ஸ்ரீமான் உ. வே. G கிருஷ்ணமாசாரியார் கீழ்க்கோர்ட்டுகளில் மூலரிகார்டுகளேத் தேடி எடுத்து ஆராய்ந்து படாதனபட்ட பரிச்ரமங்களே ஞாபகப்படுத்தி அவருக்கு சம்பிரதாயம்மிகவும் கடமைப்பட்டிருக்கிறதென்ருர். இவ்வழக்கில் பங்கெடுத்துக்கொண்ட பெரியார் யாவருடையவும், முக்கியமாக காலம்சென்ற T.T. பாஷ்யம அய்யங்கார் ஸ்வாமியின் சேவையை ச்லாகித்துப்பேசினுர். பிறகு ஸ்ரீமான்கள் ஜீயப்பங்கார் ஸ்வாமி, V. P. நரசிம்மாசார்ஸ்வாமி, பேராசிரியர் மணவாளய்யங்கார், அட்வகேட் P. B, அனந்தாசாரியார் முதலியோர் ஸ்ரீவெங்கடவரதாசாரியருடைய பல திறப்பட்ட திறமைகளேப் பாராட்டினர். அடுத்தபடியாக பேசின ஸ்ரீ G. கிருஷ்ணமாச்சாரியார் "யானேதிருமண கேஸ் தீர்ப்பு" ஊர்ஜிதமானதும் ஒரு சகாப்தம் முடிந்ததென்பதே என்னபிப்பிராயம். நம் சம்பிரதாயத்தில் ஒற்றுமை நிலவினுல் நாம் இழந்திருக்கும் இன்னும் பல பாத்யதைகளே மீண்டும் பெறலாம். இப்பாத்யதைகளெல்லாம் எம்பெருமானுக்கு நாம் செய்யக்கூடிய கைங்கர்யங்களாகவே கருத வேண்டும்" என்ருர்.

ஸ்ரீமான் வெங்கடவரதாசாரியார் தன்னே கௌரவித்ததற்கு கிருதஜ்ஞதையைத் தெரிவித்து மேலும் வருமாறு கூறினுர்: "அடியேனுக்கு நம்சம்பிரதாய

விஷயங்களும் தென்கலை வடகலை என்பதற்கு இலக்கணமும், உபய வேதாந்தம் என்றால் எதைக் குறிக்கிறது என்பதும் ஸ்வாமி அண்ணங்கராசாரியாருடைய பல ஸ்ரீ ஸூக்திகளிலிருந்துதான் தெரிந்து கொள்ளலாயிற்று. காஞ்சியில் தென்கலை-வடகலை வழக்குகள் ஒரு நூற்றுண்டுக்கு மேலாகவே தொடர்ந்துவந்துகொண்டிருக் கிறது'' என்று சொல்லி யானைத் திருமண்காப்பு வழக்கின் வரலாற்றை ஆரம்பத் திலிருந்து சுருக்கமாக எடுத்துரைத்தார்.

அடுத்தபடியாக ஸ்ரீ அண்ணங்கராசாரியாருடைய நியமனத்திற்கிணங்க முன்னாள் ஜட்ஜு ஸ்ரீ கிருஷ்ணசாமி ரெட்டியார் ஆற்றின சொற்பொழிவின் சாரம் வருமாறு. ''மேற்கு ஜெர்மனிக்குச் சென்று ஒருமாதம் கழித்து இப்போது தான் வந்தேன். இன்று ஸ்ரீமான் அண்ணங்கராச்சாரியார் ஸ்வாமிகள் உபந்யா ஸம் செய்யப்போவதை அறிந்ததும் மற்றவர்களுடன்கூட அடியேனும் அவருக்குப் பல்லாண்டு பாடவே இங்கு வந்தேன். ஸ்ரீஸ்வாமி ஸ்ரீவைஷ்ணவசம்பிரதாயத்தின் நிகரற்ற தூண். இவருக்கு நிகர் இவரே. 90—வயதை எட்டிப்பார்க்கும் மூன்று ஸ்ரீவைஷ்ணவ திக்கஜங்கள் வெங்கடவரதாச்சாரியார், G. கிருஷ்ணமாச்சாரியார், அண்ணங்கராச்சாரியார் ஸ்வாமி—இங்கு சேர்ந்து சேவை சாதிப்பது எனக்கு மிக. மகிழ்ச்சியையும் பூரிப்பையும் அளிக்கிறது. ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியார் என் லௌகிக குரு. அவர் நிழலில்தான் நான் வக்கீல் துறையில் முன்னேறினேன். என் மகிழ்ச்சிக்கு மற்றொரு காரணம் இன்றைய பாராட்டுக்கூட்டம் மிக அடக்க மாயும், பரபரப்பின்றியும், ஒருவர் மனதையும் புண்படுத்தாமல் சொற்பொழிவுகள் நடந்ததுமாகும். இதுவே ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தின் உயர்ந்த பண்பாகும் பலவிதத்திலும் இந்நிகழ்ச்சி என்மனதை மிகவும் கவர்ந்தது'' என்றார்.

பிறகு ஸ்ரீ அண்ணங்கராசாரியார் ''இராமாநுசமுனி வேழம்'' என்ற விஷயத்தைப்பற்றி இராமவேழம், அனுமவேழம், முனிவேழம், இராமாநுஜமுனி வேழம் என்ற தலைப்பில் அற்புதமாக உபந்யஸித்தார்; சபைகார்யதரிசி ஸ்ரீமான் நரசிம்மாச்சாரியாருடைய வந்தனோபசாரத்துடன் விழா இனிது முடிந்தது.

நித்யஸ்ரீ: நித்யமங்களம்.



# காஞ்சீபுரம் ஸ்ரீதேவராஜ ஸ்வாமி தேவஸ்தானம். P.B.A.

இந்த தேவஸ்தானத்தில் சில காலம் ஏகதேசமாக தர்மகர்த்ருப்தவியை வஹித்துவந்த தாதாசார்யவம்சஸ்தர்கள் தர்மபரிபாலனங்களை ஒழுங்கு பாடாகச் செய்வதில்லையென்றும் அவர்களை விலக்கி நியாயம் செலுத்தவேண்டுமென்றும் சுமார் 70 வருஷங்களுக்குமுன் வியவஹாரம் (ஸ்கீம்கேஸ்) ஆரம்பமாயிற்று. அது 60 வருஷங்களுக்குமுன் சென்னை ஹைகோர்ட்டாரவர்களால் ஒருவாறு முடிவு செய்யப்பட்டது. எங்ஙனேயென்னில், தாதாசார்ய வம்சஸ்தர்களில் ஐந்து பேர்கள் தர்மகர்த்தாக்களாயிருக்கவேண்டுமென்றும், ஒவ்வொரு வருஷத்தில் ஒவ்வொருவர் எக்ஸிக்யூடிவ் டிரஸ்டியாக இருந்து அதிகாரம் செலுத்திவர வேண்டியதென்றும், இவர்கள் அநீதியாக நடந்துகொண்டால் அதைப் பரிசீலனை

செய்து நியாயம் செலுத்துவதற்காக இவர்களுக்குமேல் ஒரு ஸூபர்விஷன் போர்டு இருக்கவேண்டியதென்றும், அந்த போர்டில் ஒரு தென்கலை ஸ்ரீ வைஷ்ணவர், (தாதாசார்யரல்லாத) ஒரு வடகலை ஸ்ரீ வைஷ்ணவர், ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணர் ஆக மூவர் அதிகாரிகளாக இருந்து தணிக்கை செய்யவேண்டியதென்றும்; அவசியம் நேருங் காலங்களில் இந்த ஸ்கிமை மாறுதல் (மாடிபிகேஷன்) செய்யலாமென்றும் முடிக்கப்பட்டது. அவ்விதமாகவே சுமார் பதினைந்து வருஷ காலம் நடந்து வந்தது.

அதிலும் தரும நிர்வாஹங்கள் மிகவும் சீர்கேடாகவேயிருந்ததனால் மறுபடியும் ஸ்கிம் மாடிபிகேஷன் செய்யப்படவேணுமென்று (தென்கலை ஸம்ப்ரதாயஸ்தர்களால்) வியாஜ்ஜியம் தொடுக்கப்பட்டது. அப்போது சுமார் பத்து வருஷ காலம் ஷை தாதாசார்ய வம்சஸ்த தர்மகர்த்தாக்கள் அறவே விலக்கப்பட்டு ஸ்மார்த்த ப்ராஹ்மணரொருவர் ரிஸீவராக ஜில்லா கோர்ட்டாரால் நியமிக்கப்பெற்று தேவஸ்தான பரிபாலனம் நடந்து வந்தது. அந்த வியவஹாரமானது விசேஷபலனைப் பெறுவியாமலே முடிந்திட்டதனால் மறுபடியுப் ஷை தாதாசார்ய வம்சஸ்தர்களே ஐந்து பேர்கள் தர்மகர்த்தர்களாக இருந்துவர நேர்ந்தது. வாதிகளான தென்கலையார்களால் சென்னை ஹைகோர்ட்டில் அப்பீல் செய்து கொள்ளப்பட்டிருந்தது. அந்த அப்பீல் (A. S. 175 of 1939) 17—1—1941 தேதியில் கனம் ஜட்ஜ் வார்ட்ஸ்வொர்த் துரையவர்களாலும் ப்ரஹ்மஸ்ரீ. கனம் ஜட்ஜ் பதஞ்சலிசாஸ்திரியவர்களாலும் பரிஷ்காரமாக முடிவு செய்யப்பட்டது. இந்த முடிவின் ஸாராம்சங்களை மேலே விளக்கிக் காட்டுகிறோம்.

ஷை தாதாசாரியர்களுக்குண்டான இந்த தர்மகர்த்ருத்வஹக்கானது பரம்பரை மிராசா? அன்று? என்கிற ஒரு வியாஜ்ஜியமும் (O. S. 8 of 1940) தனிப்பட நடந்தது. பரம்பரை மிராசுதான் என்று முன்னம் ஜில்லாகோர்ட்டில் முடிந்திருந்தது. அதன்பேரில் தென்கலையார் ஹைகோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ள, பரம்பரை மிராசு அல்ல என்று தீர்மானிக்கப்பட்டுக் கீழ்க்கோர்ட்டுத் தீர்ப்பு வலிதாக மறுக்கப்பட்டது.

கடைசியான முடிவு என்னவென்றால்; ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஒரு ப்ராஹ்மணர் (ஸ்மார்த்தர் அல்லது மாத்வர்) ஸர்வாதிகார ஸம்பந்நரான மானேஜிங் டிரஸ்டியாக சம்பளத்தில் நியமிக்கப்படவேண்டும். தேவஸ்தான ஸம்பந்தமான லௌகிகவைதிக ஸகல அதிகாரங்களும் அவரொருவர்க்கே அதீனம். தாதாசார்ய வம்சஸ்தர்களில் கீழண்டை வகுப்பிலும் மேலண்டை வகுப்பிலுமாக இரண்டு பேர்கள் ஒருவிதமான அதிகாரமுமின்றிக்கே நாமமாத்ரமான (ஹானரரி) டிரஸ்டிகளாக இருக்கவேண்டியது. மானேஜிங் டிரஸ்டியின் நடவடிக்கைகளின் மீது தணிக்கை பார்க்கவேண்டிய அதிகாரம் முழுவதும் ரிலிஜியஸ் எண்டோமெண்டு போர்டைச் சேர்ந்தது. ஷை ஸ்கிம்கேஸ் அப்பீல் வாதிகளான (அடியேன்) ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர் முதலான (எழு) தென்கலையார்களுக்கு கோர்ட்டு காஸ்டு சுமார் ரூ. 450 வரையில் தேவஸ்தானத்திலிருந்து செலுத்த வேண்டியது என்பது தீர்ப்பின் ஸாராம்சம்.

ஷி தீர்ப்பை கோர்ட்டார் வெளியிட்டளவில், அப்போது தர்மகர்த்தாக்களாக இருந்து வந்த தாதாசாரியர்கள் "நாளது வைகாசி மாதத்தில் நடைபெறவேண்டிய ப்ரஹ்மோத்ஸவம் வரையில் நாங்களேயிருந்து அனுபவித்துவிட்டு உடனே விலகிப்போய் விடுகிறோம்; கோர்ட்டார் தயவுசெய்து அந்தப்படிக்கு உத்தரவு அளிக்கவேணும்" என்று கேட்டுக்கொண்டார்கள். அதைக் கோர்ட்டார் சிறிதும் அநுமதிக்கவில்லை. "நாளது மார்ச்சு மாதம் 17உக்குள் இந்த ஆர்டர் ஆசாரத்திற்கு வரவேண்டியது அவசியம்" என்று முடிவு செய்திட்டார்கள். அப்படியே அன்று முதலாகவே ஆசாரத்திற்கு வந்துவிட்டது. வந்துகொண்டிருக்கிறது.

பகவத்ஸந்நிதிகளில் தர்மகர்த்தாக்கள் என்கிற பதவி கிடைப்பது ஸாமான்யமல்ல. ஜந்மாந்தர ஸஹஸ்ர நற்றவப்பயன் என்னவேணும். அப்படி அலப்ய லாபமான பதவியைப் பெற்றவர்கள் உண்மையில் தர்மகர்த்தாக்களாகவே இருந்து வந்தால் ஒரு பங்கமுமடையாமல் நீடூழி வாழ்வர்களென்பதில் ஐயமில்லை. தர்மகர்த்தாக்களாக நியமிக்கப்பட்டு வந்துசேர்ந்த அன்றைக்கே தர்மஹர்த்தாக்களாகத் துணியுமவர்களைப் பற்றி நாம் இங்குத் தெரிவிக்கவேண்டியது என்ன இருக்கிறது? ஸ்ரீ காஞ்சீ வரதராஜன் தேவஸ்தானமானது பலவகையிலும் ப்ரஸித்தி பெற்றது. இதற்கு நிகரான திவ்ய தேசம் வேறொன்றில்லையென்றே சொல்லலாம். இப்படிப்பட்ட திவ்யதேசத்தில் ஸ்ரீ வைஷ்ணவ ஆலயங்களுக்கு உரிய லக்ஷணங்கள் நெடுநாளாக மிகவும் பங்கமடைந்திருந்தன. ஆழ்வார்களுக்கு திருநக்ஷத்திரங்கள் கொண்டாடுவதும், பகல் பத்து, இராப்பத்து என்கிற அத்யயனோத்ஸவத்தை விபவமாக நடத்துவதும் முதலியவை விஷ்ணுவாலயங்களுக்கு விசேஷ லக்ஷணங்கள் என்பது நாம் சொல்லவேண்டுமோ? ஆழ்வார்கள் இருக்குமிடம் தெரியாமல் மூலையிலொடுக்கி வைத்திட்டு, அவர்களுடைய ஸந்நிதிகளின் வாசல்களில் மண்சுவரெழுப்பி முள்ளடைத்து.........இப்படியாகச் செய்து வைத்திருந்தார்கள் முன்னேயிருந்த டிரஸ்டிகள். கோஷ்டியின் பெருமைகளோ, ஆழ்வாராசார்யோத்ஸவ பரிபாலன வைபவங்களோ எல்லாம் ஒருவகுப்பினருடைய பெருமையாகவேயிருக்கின்றனவென்கிற நிர்வேதத்தினால்—திருவயிற்றெரிச்சலினால்-தேவாலய லக்ஷணங்களையெல்லாம் சீர்குலைத்து நடத்திவந்தார்கள். மணவாளமாமுனிகளில்லாமல் அத்யயனோத்ஸவம் நடத்தக்கூடாதென்கிற நியாயாலயத்தீர்ப்பு இருந்ததனாலே எண்பது வருஷகாலம் அத்யயனோத்ஸவத்தையே அடியோடு அடக்கியிருந்தார்கள். இப்படிப்பட்ட சில்விஷமங்கள் பண்ணியுரைக்குங்கால் பாரதமாம்.

ஆதியில் தாதாசார்ய வம்சத்தவர்களுக்கு ஏற்பட்ட பெருமைகளெல்லாம் மணவாளமாமுனிகளிடத்தில் பக்திஸம்பத்தினாலேயே என்பது அவர்களின் உள்ளமுணர்ந்த உண்மை. என்றைக்கு இவர்கள் மணவாளமாமுனிகளிடத்தில் பகைகொண்டு நடக்க ஆரம்பித்தார்களோ அன்றைக்கே இவர்களுடைய ஸ்ரீ க்ஷயிக்கத் தொடங்கிற்று. ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் ஸந்நிதியில் இவர்களுக்கு எப்படிப்பட்ட மரியாதைகள் இருந்தன! காஞ்சி க்ஷேத்திரத்து ஸகல தேவாலயங்

களிலும் எப்படிப்பட்ட மரியாதைகள் இருந்தன! அந்தோ! எல்லாமழிந்தன. இவ்வளவுக்கும் யாது காரணமென்பதை ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத (ஸ்மார்த்தர்களான) மத்யஸ்த அதிகாரிகள் உள்ளபடியே கண்டறிந்து சிலாசாஸநப்போல் எழுதிவைத்திருக்கின்றார்கள். ஸ்ரீபெரும்பூதூர் ஸந்நிதி விஷயமாக ஹைகோர்ட்டார் அவதரிப்பித்த ஜட்ஜ்மெண்டில் சிறந்த ஆராய்ச்சியுடன் அழுத்தமாக எழுதி வைத்திருக்கிற வாசகம் அச்சாகி வெளிவந்துள்ளது. மேலே நாம் எழுதியுள்ளது தான் அதில் ஸாரமாகவும் வியக்தமாகவுமுள்ளது.

ஸ்ரீபெரும்பூதூர் வியவஹாரஸாரம் சுருக்கமாகக் கேளீர். ஸ்ரீமான் V. கிருஷ்ணஸாமி ஐயர் என்பவர் அவ்வூர் வியவஹாரத்தில் வடகலையார்களுக்கு வக்கீலாக இருந்துவந்தார். அப்போது அவர் வழக்கை நடத்திவருகிறார். திடீரென்று அவர் ஜட்ஜ் பதவியில் நியமிக்கப்பெற்றார். அவருடைய பெஞ்சில் கடைசியானவொரு (ஸ்ரீபெரும்பூதூர் வியாஜ்ஜிய) அப்பீல் விசாரணைக்குப் போட்டிருந்தது. அது தென்கலையாருக்குத் தெரிந்தவுடனே, அக்காலத்தில் பிரபல வக்கீலாகப் புகழ்பெற்றிருந்தவரும், ஸ்ரீ உ. வே. V. N. வெங்கடவரதாசாரியர்ஸ்வாமிக்கு மாமனாருமான ஸ்ரீ. T. ரங்காசாரியர்ஸ்வாமிகள் தென்கலையார்களுக்கு வக்கீலாயிருந்தபடியால் (ஸ்ரீபெரும்பூதூர் தென்கலையார்கள்) அவரிடம் ஓடிச்சென்று, "இந்த கிருஷ்ணஸாமி ஐயரவர்கள் வெகுகாலமாக வடகலையார்களுக்கு வக்கீலாயிருந்துவந்தபடியால் இவருடைய கோர்ட்டில் எங்களுக்கு நியாயம் கிடைக்காதென்று மனுகொடுத்து, அப்பீலை வேறு ஜட்ஜின் பெஞ்சுக்கு மாற்றித்தரவேணும்" என்று மன்றாடிக்கேட்டுக்கொண்டார்கள். ஸ்ரீ. T. ரங்காசாரியர்ஸ்வாமிகள் இந்த வேண்டுகோளுக்குச் சிறிதும் இணங்கவில்லை. "இவ்விதமாக நான் மனு கொடுக்கமுடியாது, வேறு வக்கீலைப் பார்த்துக்கொள்ளுங்கள்; உங்கள் ரிகார்டு கட்டுகளையும் எடுத்துக்கொண்டுபோங்கள்" என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டார். கடைசியாக அந்த ஜட்ஜின் பெஞ்சிலேயே விசாரணை நடத்தவேண்டி வந்தது. தென்கலையார்கள் தங்களுக்கு அபஜயம் திண்ணமென்று நிச்சயித்து எவ்விதமான சிரத்தையும் கொள்ளாமலிருந்துவிட்டார்கள். கனம் ஜட்ஜ் கிருஷ்ணஸாமி ஐயரவர்கள் உபயகலையாருடையவும் ரிகார்டுகளை ஆர அமரப் பரிசீலித்திருந்தவராதலால் இரண்டொரு நாழிகைக்குள் அப்பீலை அலம்பிக் கவிழ்த்துவிட்டார். அந்த தீர்ப்பில்தான் அந்த ஜட்ஜ்மஹாநுபாவர்தான் தாதாசாரியர்களைப்பற்றி எழுதி வருகையில் "இவர்களுக்கு மணவாள மாமுனிகளிடத்தில் என்றைக்கு த்வேஷமுண்டாயிற்றோ அன்றைக்கே இவர்களிடம் அஸ்ரீ குடி புகுந்தது" என்று எழுதிவைத்திருக்கிறார். இதை நாம் இன்றாக எழுதுகிறோமல்லோம். ஜட்ஜ்மெண்டுவாசகங்களுடன் பலகால் எழுதி வெளியிட்டுள்ள விஷயமிது.

தேவப்பெருமாள் ஸந்நிதியை ஆண்டுவந்த பழைய டிரஸ்டிகள் ஷ ஸந்நிதியில் மணவாளமாமுனிகளுக்கும் மற்றுமுள்ள ஆழ்வாராசாரியர்களுக்கும் இழைத்த தீங்குகள் உண்மையாகவே ராமாயணமும் பாரதமும் போன்றனவை. அவை நமது பல புத்தகங்கள் மூலமாக வெளிவந்துமிருக்கின்றன. கோர்ட்டு ரிகார்டுகளிலும் ஏறிக்கிடக்கின்றன. அப்படிப்பட்ட தீங்குகள் அற்றொழியவேணு

மென்றே இந்த தேவஸ்தானத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்களல்லாத பிராமணர்கள் அதிகாரம் செலுத்தும் டிரஸ்டியாக நியமிக்கப்பட்டார்கள். 17—3—41 தேதி முதலாக மேலே குறித்த பிராமணர்களின் அதிகாரத்திலேயே இந்த தேவஸ்தான நிர்வாஹம் நடைபெற்று வருகின்றது. ஆழ்வாராசாரியர்களின் திருநக்ஷத்ரோத்ஸவ பரிபாலனங்களும் அத்யயநோத்ஸவமும் மணவாளமாமுனிகளின் திருநக்ஷத்ரோத்ஸவமும் இந்த தேவஸ்தானத்தில் பல வருஷங்களாகவே நிறுத்தப்பட்டு அதுவே ஒரு மாமூலாக வந்திருந்தபடியால் மத்யஸ்தர்களான புது டிரஸ்டிகள் நியமிக்கப்பட்டுங்கூட அநாதிமாமூல்படி உத்ஸவாதிகளை நடத்த ஸௌகரிய மில்லாமல் போகவே அவைகளுக்காகத் தனி வியாஜ்ஜியங்கள் நடத்தி அநாதி மாமூல்கள் அநேகமாகப் புதுப்பிக்கப்பட்டன. அவை சில வருஷகாலமாகவே ஒழுங்காக நடந்து வருகின்றன. அவை நடக்க ஆரம்பித்த பிறகு தான் இந்த தேவஸ்தானத்தை விஷ்ணுவாலயமென்று சிறப்பித்துச் சொல்ல அவகாசமுண்டாயிற்று. ப்ரஹ்மஸ்ரீ S. நரஸிம்ஹய்யரவர்களென்பவர் இவ்வாலயத்தில் சில வருஷங்கள் எக்ஸிகியூடிவ் டிரஸ்டியாயிருந்து நல்ல புகழ் பெற்ருர். ஸகல பக்தர்களும் அவரையே அடிக்கடி நினைக்கிருர்கள்.

தேவப்பெருமாள் தேவஸ்தானத்தில் அநாதியாக நடைபெற்றுவரும் காரியங்களெல்லாம் திவ்யப்ரபந்தகோஷ்டிக்கு ஆதிக்யங்கொடுத்தே நடந்து வருகின்றனவென்பதையும் சிறிது மூதலிக்கிருேம். வைகாசி மாதத்தில் நடைபெறும் வஸந்தோத்ஸவம் ஏழு நாட்களிலும் தேவஸ்தான திட்டமாக வஸந்தமும் சந்தனமும் விநியோகம் செய்வது வழக்கம். பெருமாள் ஸன்னிதி வீதி யெழுந்தருளித் திருப்புகையில் திருவடி ஸன்னிதி வாசலில் திவ்ய ப்ரபந்த கோஷ்டி தொடங்கும் போதுதான் அவை விநியோகஞ்செய்வது நாளைக்கும் வழக்கம். இங்ஙனே பலபல விஷயங்கள் தெரிவிக்கவேண்டியவையுண்டு. பலகால் நாம் தெரிவித்திருப்பவை மாச்சரியமற்ற மதியுடன் காணத்தக்கவை.

தாதாசாரியர்களின் மூலபுருஷர்கள் ஆதியில் தென்கலையார்களாகவே யிருந்தனரென்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. அவை நம்மால் வெளியிடப்பட்டுமிருக்கின்றன. இதனுல்தான் இவர்களுக்கு இத்தேவஸ்தானத்திலும் இத்தகைய வேறு சில தேவஸ்தானங்களிலும் முக்கியமான சில மரியாதைகள் இருந்தன. இவர்கள் கலை மாறினபிறகும்கூட பலவாண்டுகள் கோவில் மாமூல்படியே தங்கள் சொந்த கிருஹங்களிலும் சுபாசுப சந்தர்ப்பங்களில் மணவாள மாமுனிகளின் தனியனையே ரக்ஷித்து வந்தார்கள் என்பது கோர்ட்டு ரிகார்டுகளிலுைல் விளங்கும். இதை யொட்டியே இவர்களுக்கு ஸ்ரீ தேவராஜஸ்வாமி தேவஸ்தானத்தில் தர்மகர்த்ருத்வம் ஏற்பட எம்பெருமான் சங்கற்பித்தான். ஆனுல் இவர்கள் ஸஹவாஸதோஷத்தினுல் இக்கோயிலில் ஆழ்வார்கள் ஸந்நிதி விஷயத்திலும் அருளிச்செயல் அநுஸந்தான விஷயத்திலும் பலவித அபசாரங்கள்பட ஆரம்பித்ததிலிருந்து இவர்களுடைய ஸ்ரீயானது குறையத் தொடங்கி கடைசியில் தேவஸ்தான முழு நிர்வாஹமும் பொது பிராஹ்மணர்களின் கைக்கு மாறியது.

வடகலையார்களுக்குப் பொதுவாக ஆழ்வார்களிடத்திலும் அருளிச்செயல் விஷயத்திலும் ப்ரதிபத்தி கிடையாதென்பது கோர்ட்டு தீர்ப்புகளினுல் விளங்கக்

கூடிய விஷயம். திருப்பதி அத்யாபக வியாஜ்ஜியத்தில் (1947—I. M. L. T. Page 159) இதைப் பிரிவிகௌன்ஸில் கனம் ஜட்ஜுகள் குறிப்பிட்டுள்ளனர். இதற்கு முன்னமேயே, ஹு 1815ல் செங்கல்பட்டு ஜில்லா கலெக்டராகவிருந்த M Crole. என்னும் துரையால் எழுதப்பட்ட ஒரு புத்தகத்தில் (Chingleput District Manual) இதைக் காணலாம். வடகலையார்களில் சிறந்த படிப்பாளியாக விருந்து சில வருஷங்கள் ஹைகோர்ட்டு ஜட்ஜாகவுமிருந்த ஸ்ரீ V. V. ஸ்ரீனிவாஸய்யங்கார், 22—7—1938ல் வெளிவந்த சுதேசமித்திரன் பத்திரிகையில் வடகலையார்களுக்கு ஆழ்வார்களிடத்திலும் திவ்ய ப்ரபந்தங்கள் விஷயத்திலும் ப்ரதிபத்தியில்லாம லிருப்பது சோசநீயம்; இதில் இவர்கள் இனிமேலாவது ச்ரத்தை கொள்ளவேண்டும் என்று எழுதியுள்ளார். ஆயினும், செங்கல்பட்டு ஜில்லா கோர்ட்டில் நடந்த (O. S. No. 7. of 1945) ஒரு வியாஜ்ஜியத்தில், காஞ்சீபுரம் வடகலையார்களுள் தற்காலத்திலும் விளங்கும் இருவர் ஆழ்வார்களின் தமிழ்ப் பிரபந்தங்கள் ஸ்த்ரீ களுக்கும் சூத்திரர்களுக்குமே உரியனவென்று கைகூசாமல் ப்ரமாணம் செய்துள் ளனர். இதை எடுத்துக்காட்டி, சமீபத்தில் நடந்த ஒரு வியாஜ்ஜியத்தில் (O. S. No. 30 of 1956.) செங்கல்பட்டு சப் ஜட்ஜி (ஜட்ஜ்மெண்டு பாரா 20ல்) தமது மனதுக் கெட்டியவரையில் வடகலையார்கள் தமிழ்ப் பிரபந்தங்களை ஸேவிக்க உள்ளூர ருசி கொண்டிராரர்களென்று எழுதியுள்ளார். இத்தகைய சான்றுகளினால், திவ்ய ப்ரபந்தங்களில் பாடல் பெற்றுள்ள பெருமையினாலேயே திவ்ய தேசங்கள் என்று விளங்கும் கோயில்களுக்கும் வடகலையார்களுக்கும் இடையில் எவ்வளவு தூரமுள்ள தென்பதை மத்தியஸ்தர்கள் அறியலாம்.

பலவகையிலும் சிறப்புப் பெற்ற இந்த தேவராஜஸ்வாமி தேவஸ்தானம் கலா வைஷம்ய ப்ரயுக்தமான கலஹமொன்று மட்டும் இடம் பெறுதிருந்தால் இதுதான் பூலோக வைகுண்டமென்னத்தகும். தேவப்பெருமாள் அவதரிக்கும் போதே கலஹந்தான் முற்பட்டதென்று புராணம் பகர்கின்றது. அது இப்படியும் அநுவர்த்திக்க வேணுமா? லீலா விபூதியில் இதுமொரு லீலை போலும் பேரருளாள னுக்கு. சிங்கம் புலி கரடி சிறுத்தை முதலிய மிகக்கொடிய மிருகங்களோடும் அவலீலையாகப் பழகி வாழ்கின்றவர்களைப் பார்க்கிறோம். ஸ்ரீவைஷ்ணவர்கள் கலந்து பழகி வாழமுடியவில்லையென்றால் இதனிலும் மிக்க துர்தசையுண்டோ வைணவமதத்திற்கு? இந்த தேவஸ்தானத்தில் பலபல வியவஹாரங்கள் [வியாஜ்ஜி யங்கள்] தோன்றியிருந்தாலும் முக்கியமானவை இரண்டே யென்னலாம். ஒன்று மணவாளமாமுனிகள் ஸன்னிதி விஷயம். மற்றொன்று அத்யாபக கைங்கர்ய விஷயம். இவ்விரண்டும் நீதிமன்றங்களில் பரிபூர்ணமான பரிஸமாப்தியை யடைந்துவிட்டன. இந்த தேவாலயத்தில் மணவாளமாமுனிகள் திருக்கோலம் கிடையவே கிடையாதென்றும், உண்டென்றாலும் மூல விக்ரஹ மொழிய உத்ஸவ விக்ரஹம் கிடையவே கிடையாதென்றும், அதுவுமுண்டென்றாலும் அந்த விக்ரஹம் இடம்விட்டுப் பெயரவே கூடாதென்றும்........இப்படி விசித்திரமான வியவஹாரங்களை மஹா விவேகிகளெனப்பட்டவர்களும் ஜௌப்பி நடத்திவந்தார் கள். இதுஸம்பந்தமான எல்லாச் சச்சரவுகளும் தொலைந்து ஸுபிக்ஷமான காலத்திலே நாம் வாழ்கிறோம். பொலிக! பொலிக!! பொலிக!!!

ஸ்ரீரஸ்து
ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

**26-9-76 ஞாயிற்றுக்கிழமையன்று பிற்பகலில் 3 மணிமுதல் 6 மணிவரைக்கும் திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் தென்னாசார்ய ஸம்ப்ரதாய ஸபையின் சார்பில் நடைபெற்ற அபிநந்தநஸதஸ்ஸில்**

சென்னை எழும்பூர் வாவதூகஸார்வபௌம ஸ்ரீமதுபயவே

## V. N. வேங்கடவரதாசார்ய ஸ்வாமிக்கு

## ஸ்ரீகாஞ்சி P. B. அண்ணங்கராசாரியர்

வாசித்தளித்த

# அபிநந்தந பத்திரிகை

(வெண்பா)

1. அத்திகிரி வாழ்வரத னத்தியுறு மார்த்திதனைச்
சத்தியுடன் சங்கரித்த சாதுரிகர் - வித்தைமிகு
வேங்கட நல்வரதர் விசுபுகழ் விறுதனை
ஈங்குரைசெய் தின்புறுவோ மின்று.

2. தேவப் பெருமாள்நன் தெய்வக் கஜேந்திரனார்
ஆவத்தைத் தீர்த்தளித்த ஆரியனே! - விவின்றி
வென்று புகழ்பெற்ற வேங்கட நல்வரதா!
என்றுமெமை யாண்டிடுக விங்கு.

(ச்லோகம்)

श्रीहस्तिशैलशिखरोज्वलदेवराज श्रीहस्तिपुण्ड्रपरिपालनलब्धकीर्तौ
श्रीवेङ्कटेशवरदार्यमहानुभावे श्रीश्रीशयोस्सततमस्तु कृपाकटाक्षः ॥

ஸ்ரீஹஸ்திசைலசிகரோஜ்வல தேவராஜ ஸ்ரீஹஸ்திபுண்ட்ர பரிபாலநலப்தகீர்த்தௌ ।
ஸ்ரீவேங்கடேசவரதார்ய மஹாநுபாவே ஸ்ரீஸ்ரீசயோஸ் ஸததமஸ்து க்ருபாகடாக்ஷ: ॥

श्रीरङ्गे वेङ्कटाद्रौ करिशिखरिवरे दर्शनस्थापनार्थम् ।
तत्तत्काब्दलोवानां बहुविधविपदां वारणार्थं च पृथ्व्याम् ॥
प्रादुर्भूत! प्रसिद्धप्रतिभ! वरमुनेस्संप्रदायप्रदीप!
स्वामिन्! विख्यातकीर्ते! जयजय विजयस्वेति शंसाम नित्यम् ॥
वीयेन् (V. N.) वेङ्कटवरदाचार्यमहात्मन्! मनीषिमान्यमते! ।
जय विजयीभव सततं भवतः करुणैव शरणमस्माकम् ॥

ஸ்ரீரங்கே வேங்கடாத்ரௌ கரிசிகரிவரே தர்சநஸ்தாபநார்த்தம்
தத்தத்காலோத்பவாநாம் பஹுவிதவிபதாம் வாரணார்த்தஞ்ச ப்ருத்வ்யாம் ।
ப்ராதுர்ப்பூத ! ப்ரஸித்தப்ரதிப ! வரமுநேஸ் ஸம்ப்ரதாயப்ரதிப !
ஸ்வாமிந் ! விக்க்யாதகீர்த்தே ! ஜயஜய விஜயஸ்வேதி சம்ஸாம நித்யம் ॥

V. N. வேங்கடவரதாசார்யமஹாத்மந் ! மநீஷிமாந்யமதே ।
ஜயவிஜயீபவ ஸததம் பவத: கருணைவ சரணமஸ்மாகம் ॥

अभिनवपात्रपद्यकथनादथ पुण्ड्रभिदाविवदनवर्धनाच्च निगमान्तगुरोर्विषये ।
कलहकृतां नृणां विविधचेष्टित भञ्जनजा विमलयशश्छटा विजयतां भवतस्सततम् ॥

॥ நித்யஸ்ரீர் நித்யமங்களம் ॥

30-9-76 புரட்டாசித் திருமூலத்தன்று ஸ்ரீ காஞ்சி தேவப்பெருமாள்
ஸன்னிதி மணவாள மாமுனிகள் திருவோலக்கத்தில்

செங்கற்பட்டு அட்வகேட் ஸ்ரீமதுபயவே

G. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமிக்கு

நிகழ்த்திய பாராட்டில் வாசித்தளித்த

சுலோகம்

Released by Maran's Dog ,Toronto, Canada

श्रीमान् जीकृष्णमार्य : करिशिखरिशिखाभूषणश्रीशभक्त:
निष्णातो न्याय्यमार्गे पटुतरधिषणो वावदूकाग्रगण्य : ।
श्रीकाञ्चीदेवराजालयविविधविवादेषु जेता पुरस्तात्
श्रीमत्कान्तोपयन्तृप्रवरकरुणया विन्दतां दीर्घमायु : ॥

(இதன் கருத்து)

தேவப்பெருமாள் பக்கலில் பேரன்பு பூண்டவரும், நீதி நன்னெறியில் ஆழ்ந்தவரும், மஹா மேதாவியும், மஹாவாக்மியும், தேவப்பெருமாள் ஸன்னிதியில் தோன்றின பலவகைப்பட்ட வ்யவஹாரங்களில் முந்துறமுன்னம் வெற்றிபெறுவிப் பவருமான ஸ்ரீமதுபயவே (அட்வகேட்) ஜி. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி மணவாள மாமுனிகளின் திருவருளால் நீடூழி வாழ்க வாழ்க...........

|| பேரருளாளன் பேரருள் பொலிக ||

Released by Maran's Dog ,Toronto, Canada

இவ்வரலாறு செவிப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணபகவான், பெரிய திருவடியை நினைத்தருளி, உடனே வந்துநின்ற அக்கருடாழ்வானது தோளின்மேல் ஏறிக்கொண்டு பலராமன் முதலானாரோடுகூட பாணபுரமாகிய சோணிதபுரத்துக்கு எழுந்தருளும்போதே, அப்பட்டணத்தின் ஸமீபத்திற் காவல்செய்துகொண்டிருந்த சிவபிரானது ப்ரமதகணங்கள் எதிர்த்துவர, அவர்களையெல்லாம் அழித்து பின்பு சிவபெருமானால் ஏவப்பட்டதொரு ஜ்வரதேவதை மூன்று கால்களும் மூன்று தலைகளுமுள்ளதாய் வந்து பாணனைக் காப்பாற்றும்பொருட்டுத் தன்னோடு யுத்தஞ்செய்ய, தானும் ஒரு ஜ்வரத்தையுண்டாக்கி இதன் சக்தியினாலே அதனைத் துரத்திவிட்ட பின்பு, சிவபிரானது அநுசராகையாற் பாணாஸுரனது கோட்டையைச் சூழ்ந்துகொண்டு காத்திருந்த அக்நிதேவர் ஐவரும் தன்னோடு எதிர்த்துவர, அவர்களையும் த்வம்ஸம் பண்ணி, பாணாஸுரனோடு போர்செய்யத் தொடங்க அவனுக்குப் பக்கபலமாகச் சிவபெருமானும் ஸுப்ரஹ்மண்யன் முதலிய பரிவாரங்களுடன் வந்து எதிர்த்துப் போரிட, கண்ணன் தான் ஜ்ரும்பணாஸ்த்ரத்தைப் பிரயோகித்துச் சிவனை ஒன்றுஞ் செய்யாமற் கொட்டாவி விட்டுக்கொண்டு சோர்வடைந்து போம்படி செய்து ஸுப்ரஹ்மண்யனையும் கணபதியையும் ஹுங்காரங்களால் ஒறுத்து ஓட்டி, பின்னர், அனேகமாயிரஞ் சூரியர்க்குச் சமனான ஸுதர்சநாழ்வானை யெடுத்துப் பிரயோகித்து அப்பாணனது ஆயிரந்தோள்களையும் தாரை தாரையாய் உதிர மொழுக அறுத்து அவனுயிரையுஞ் சிதைப்பதாக விருக்கையில் பரமசிவன் அருகில்வந்து வணங்கிப் பலவாறு பிரார்த்தித்ததனால் அவ்வாணனை நான்கு கைகளோடும் உயிரோடும் விட்டருளி, பின்பு அவன் தன்னைத் தொழுது அநிருத்தாழ்வானுக்கு உஷையைச் சிறப்பாக மணஞ்செய்விக்க, கண்ணபிரான் திருவுள்ள முகந்து த்வாரகைக்கு மீண்டெழுந்தருளினன் என்ற வரலாறு அறியத்தக்கது. 22

வைப்பாய வான்பொருளென்று* நல்லன்பர் மனத்தகத்தே
எப்போதும் வைக்கு மிராமாநுசனை* இருநிலத்தில்
ஒப்பாரிலாத உறுவினையேன் வஞ்ச நெஞ்சில்வைத்து
முப்போதும் வாழ்த்துவன்* என்னாமிதுவவன் மொய்புகழ்க்கே? 23

| | | | |
|---|---|---|---|
| நல் அன்பர் | விலக்ஷண பக்தியுடையவர்கள் | வஞ்சம் நெஞ்சில் வைத்து | (என்னுடைய) க்ருத்ரிமமான நெஞ்சிலே வைத்து |
| வைப்பு ஆய வான் பொருள் என்று | "எம்பெருமானார்தாம் நமக்கு ஆபத்ரக்ஷகமான அக்ஷய தநம்" என்று கொண்டு | முப்போதும் வாழ்த்துவன் | ஸர்வகாலமும் ஏத்தாநின்றேன்; |
| மனத்தகத்தே | தங்கள் ஹ்ருதயத்திலே | இது | மிகப்பெரிய அவரை நீசனாகிய நான் வாழ்த்துகையாகிற இது |
| எப்போதும் வைக்கும் | எப்போதும் த்யாநிப்பதற்கு விஷயமான | | |
| இராமாநுசனை | எம்பெருமானாரை | அவன் | அவ்வெம்பெருமானாருடைய |
| இரு நிலத்தில் | இந்தப் பெரிய வுலகத்திலே | மொய் புகழ்க்கு | சிறந்த கீர்த்திக்கு |
| ஒப்பார் இலாத உறு வினையேன் | ஒப்பற்ற மஹாபாபியான அடியேன் | என் ஆம் | என்னாகுமோ? [அவத்யமாமோ?] |

* * *—"வளவேழுலகின் முதலாய" என்ற திருவாய்மொழியில் ஆழ்வார் நைச்யாநுஸந்தாநம் பண்ணினதுபோல, இப்பாட்டில் இவ்வமுதனாரும் நைச்யாநுஸந்தாநம் பண்ணுகிறார்.

எம்பெருமானார் எப்படிப்பட்டவர்?—அவர் தம்மையே நிதியாகப்பற்றின விலக்ஷண பக்தியுக்தரான ஆழ்வான் ஆண்டான் முதலான மஹாபுருஷர்களாலே சிந்தை செய்யப்படுபவர். அப்படிப்பட்ட விலக்ஷண பக்தி எனக்குண்டோ? இல்லை;

கள்ளங்கவடு பொருந்திய நெஞ்சையுடையேன் நான்; என்னைப்போன்ற மஹா பாபி எவ்வுலகிலுமில்லை; நானா அவ்வெம்பெருமானாரைத் துதிப்பதற்கு அர்ஹன்!, ஸர்வாத்மநா அடியேன் அநர்ஹன். அப்படி யிருந்தும் என்னை நான் மறந்து அவரை வாழ்த்தத் தலைப்பட்டேனே; அவருடைய சிறந்த கீர்த்திக்கு என்னுடைய வாழ்த்து அவத்யகரமாகுமே! ஐயோ! அநியாயம் பண்ணிவிட்டேனே!! என்று அலமருகின்றார். இங்ஙனே பேசுவதும் ஒருவகை ஸ்தோத்ர ப்ரணாளி என்று கொள்க. ... ... ... ... ... 23

மொய்த்தவெந் தீவினையால் பல்லுடல்தோறும் மூத்து* அதனால்
எய்த்தொழிந்தேன் முனநாள்களெல்லாம்* இன்று கண்டுயர்ந்தேன்
பொய்த்தவம் போற்றும் புலைச்சமயங்கள் நிலத்தவியக்
கைத்தமெய்ஞ்ஞானத்து* இராமாநுசனென்னும் கார்தன்னையே. 24

| | |
|---|---|
| முன நாள்கள் எல்லாம் | கீழ்கழிந்த அநாதிகாலமெல்லாம் |
| பல் உடல் தோறும் | பலபல சரீரங்கள்தோறும் |
| மொய்த்தவெம் தீ வினையால் மூத்து | ஆத்மாவை மொய்த்துக் கொண்டிருக்கிற அதிக்ரூரமான கர்மத்தாலே கிழத்தனம் வருமளவும் வாஸஞ் செய்து |
| அதனாலே | அத்தாலே |
| எய்த்து ஒழிந்தேன் | மிக்க பரிதாப மடைந்தேன்; |

| | |
|---|---|
| பொய் தவம் போற்றும் புலைச் சமயங்கள் | கபடமான அநுஷ்டானங்களை நடத்திப் போருகிற நீச மதஸ்தர்கள் |
| நிலத்து அவிய | இந்நிலவுலகத்திலே வேரற்றொழியும்படி |
| கைத்த | நிரஸித்தருளின |
| மெய் ஞானத்து | உண்மைஞான முடையரான |
| இராமாநுசன் என்னும் கார்தன்னை | எம்பெருமானாராகிற காளமேகத்தை |
| இன்று கண்டு | இன்று அடியேன் ஸேவிக்கப் பெற்று |
| உயர்ந்தேன் | சிறந்தவனானேன் |

***—நெடுநாளாக ஸம்ஸாரத்திலிருந்து பலபல கருமங்களைப்பண்ணி, அக்கருமங்களின் பலனைப் பலபல பிறவிகளிற் பிறந்து படாதனபட்டு இப்படியாகவே அநேக பர்யாயம் அவஸந்நனாய்க் கிடந்தேன் நான்; இப்பொழுது, பரம உதாரரான எம்பெருமானார் இப்பூமியிலவதரித்துப் பல துர்மதங்களை வேரறுத்தொழித்ததுபோல எனது கருமங்களையும் வேரறுத்தொழித்துத் தம்முடைய நிர்ஹேதுக க்ருபையாலே தம்மைக் காட்டியருளக், கண்டு கிருதார்த்தனானேனென்கிறார்.

பொய்த்தவம் போற்றும் புலைச்சமயங்கள்—ராவண ஸந்யாஸம், காலநேமிஜபம் முதலியவைபோலே மதாந்தரஸ்தர்கள் க்ருத்ரிமமான ஆசாரங்களை அநுஷ்டிப்பார்களென்க. மெய்ஞ்ஞானத்திராமாநுசன—“யதார்த்தம் ஸர்வவிஜ்ஞாநம்” என்று ஸ்தாபித்தருளினவரிறே எம்பெருமானார். ... ... ... 24

காரேய் கருணை யிராமாநுச* இக்கடலிடத்தில்
ஆரே யறிபவர் நின்னருளின்தன்மை* அல்லலுக்கு
நேரேயுறைவிடம் நான்வந்து நீயென்னை யுற்றபினுன்
சீரே யுயிர்க்குயிராய்* அடியேற்கின்று தித்திக்குமே. 25

| | |
|---|---|
| கார் ஏய் கருணை இராமாநுச! | மேகத்தையொத்த கருணையையுடைய எம்பெருமானாரே! |
| நான் | அடியேன் |

| | |
|---|---|
| அல்லலுக்கு நேர் உறைவு இடம் | துக்கங்களுக்கு நேரே வாஸஸ்தானமா யிருப்பவன்; |
| என்னை | இப்படிப்பட்ட அடியேனை |

| | | | |
|---|---|---|---|
| நீ வந்து உற்ற பின் | தேவரீர் தாமாகவே ஸ்வீகரித்தருளின பின்பு | இன்று தித்திக்கும் | இன்று ரஸியா நின்றது; |
| உன் சீரே | தேவரீருடைய கல்யாண குணங்களே | நின் அருளின் தன்மை | தேவரீருடைய க்ருபையின் ஸ்வபாவத்தை |
| உயிர்க்கு உயிர் ஆய் | ஆத்மாவுக்கு தாரகமாய் | இ கடல் இடத்தில் | கடல்சூழ்ந்த இப் பூ மண்டலத்தில் |
| அடியேற்கு | அடியேனுக்கு | ஆரே அறிபவர் | அறியக்கூடியவர்கள் ஆருளர்? ஆருமில்லை |

* * * — ஜலஸ்தலவிபாகம் பாராமல் ஸர்வத்ர ஸமமாக வர்ஷிக்கின்ற மேகம் போலே, தாழ்ந்தோர் உயர்ந்தோர் என்னும் வாசி பாராமல் எல்லார் திறத்தும் அருள் புரிகின்ற எம்பெருமானாரே! மிகக்கொடிய துக்கங்களுக்கெல்லாம் இருப்பிடமான என்னை தேவரீர் தாமே வந்து விஷயீகரித்தபின்பு தேவரீருடைய திருக்கல்யாண குணங்களே எனக்குப் பரமபோக்யமாய் ஆத்மதாரகமுமாய் விட்டது. தேவரீர் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர் என்னுமிடத்தை இவ்வுலகில் உள்ளபடியே ஒருவருமறியார்கள். ... ... ... ... 25

திக்குற்றகீர்த்தி யிராமாநுசனை* என்செய்வினையாம்
மெய்க்குற்றம் நீக்கி விளங்கிய மேகத்தை* மேவும்நல்லோர்
எக்குற்றவாள ரெதுபிறப் பேதியல்வாக நின்றோர்
அக்குற்ற மப்பிறப்பு* அவ்வியல்வே நம்மையாட்கொள்ளுமே. 26

| | | | |
|---|---|---|---|
| என் செய்வினை ஆம் | என்னாலே செய்யப்பட்ட வினையாகிற | எக் குற்றவாளர் | யாதொரு குற்றத்தையுடையராகவும் |
| மெய் குற்றம் நீக்கி | நிலைநின்ற தோஷங்களைப் போக்கி | எது பிறப்பு | யாதொரு ஜன்மத்தை யுடையராகவும் |
| விளங்கிய | (இவனுடைய தோஷங்களைப் பொக்கப் பெற்றோமென்னும் மகிழ்ச்சியாலே உஜ்வலரான | ஏது இயல்வு ஆக | யாதொரு சரிதையை யுடையராகவும் |
| | | நின்றோர் | முன்பு நின்றார்களோ, |
| மேகத்தை | பரம உதாரராய் | அக் குற்றம் | அந்தக் குற்றமும் |
| திக்கு உற்ற கீர்த்தி | திசைகள்தோறும் விரிந்த புகழை யுடையரான | அப் பிறப்பு | அந்த ஜன்மமும் |
| இராமாநுசனை | எம்பெருமானாரை | அ இயல்வே | அந்த சரிதையுமே |
| மேவும் | பொருந்தியிருக்கின்ற | நம்மை | நம்மை |
| நல்லோர் | விலக்ஷணர்கள் | ஆள் கொள்ளும் | அடிமைப்படுத்திக் கொள்ளவற்று. |

* * * — என் பாவங்களைப் போக்கிப் பெரும்புகழ்படைத்த பரமோதாரரான எம்பெருமானாரை அடிபணிந்தவர்கள், அடிபணிவதற்கு முன்பு யாதொரு குற்றத்தை யுடையராகவும் யாதொரு ஜன்மத்தை யுடையராகவும் யாதொரு நடத்தையை யுடையராகவும் இருந்தார்களோ, அந்தக் குற்றமே அந்த ஜன்மமே அந்த நடத்தையே நம்மை ஆட்படுத்திக்கொள்ளா நின்றது — என்கிற விதற்குக் கருத்து என்னென்னில்; 'இவ்விதமான இழிதொழிலும் இழிகுலமும் அறிவின்மையுமான இவற்றையுடைய நாமும் இவர்களைப்போல் எம்பெருமானாரை அடிபணிந்து உஜ்ஜீவிக்கலாம்' என்று நம்போலியர்க்கு ஒரு தைரியத்தை உண்டாக்குவதற்காகவே அந்த மஹான்கள் அப்படி ஜ்ஞாநவ்ருத்த வம்சங்களால் நிஹீநராயிருந்து காட்டினார்கள் என்கிற அத்யவஸாய விசேஷத்தைக் காட்டுவதே இப்பாட்டின் கருத்து. அவர்களுடைய ஜாதி முதலியவை ஏதாயினும் அவர்களெல்லாரும் அப்படியே நமக்கு உத்தேச்யர்கள் என்று காட்டியவாறுமாம். ... ... 26

கொள்ளக் குறைவற்றிலங்கி* கொழுந்துவிட் டோங்கியவுன்
வள்ளற்றனத்தினல் வல்வினையேன் மனம் நீபுகுந்தாய்*
வெள்ளைச் சுடர்விடுமுன் பெருமேன்மைக் கிழுக்கிதென்று
தள்ளுற்றிரங்கும்* இராமாநுசவென் தனி நெஞ்சமே. 27

| | | | |
|---|---|---|---|
| இராமாநுச | எம்பெருமானாரே !, | இது | (வஸிஷ்டன் சண்டாள க்ருஹத்தில் புகுந்தாற்போலே) புகுந்த விது. |
| கொள்ள குறைவு அற்று இலங்கி | கொள்ளக் கொள்ளக் குறையாமல் தானே விளங்கி | வெள்ளை | பரிசுத்தமாய் |
| | | சுடர் விடும் | விளங்காநின்றுள்ள |
| கொழுந்து விட்டு ஓங்கிய | மேன்மேலும் இளகிப் பதித்து வளர்ந்திருப்பதான | உன் பெருமைக்கு | தேவரீருடைய ப்ரபாவத்திற்கு |
| உன் வள்ளல் தனத்தினல் | தேவரீருடைய ஔதார்ய குணத்தாலே | இழுக்கு என்று | அவத்யாவஹம் என்று |
| வல் வினையேன் மனம் | மஹா பாபியான எனது நெஞ்சிலே | என் தனி நெஞ்சம் | எனது துணையற்ற நெஞ்சானது |
| நீ புகுந்தாய் | (தேவரீருடைய பெருமை பாராதே) வந்து புகுந்தருளிற்று ; | தள்ளுற்று இரங்கும் | தளர்ந்து ஈடுபடா நின்றது. |

* * *—ஸ்வாமிந் ! தேவரீருடைய பெருமையையும் அடியேனுடைய சிறுமையையும் சிறிதும் பாராமல் "இவன் நம் அடியார் விஷயத்திலே சபலனுயிருப்பானொருவன்" என்கிற இவ்வளவையேகொண்டு பாபிஷ்டமான என் ஹ்ருதயத்திலே தேவரீர் புகுந்தருளிற்று; வஸிஷ்டபகவான் சண்டாளர்மனையிற் புகுந்தாற்போல் தேவரீர் என் நெஞ்சில் புகுந்து விது, தேவரீருடைய பரிசுத்தமாய் விளங்கும் மஹிமைக்கு என்ன அவத்யத்தை விளைத்திடுமோவென்று அஞ்சாநின்றேன். ... 27

நெஞ்சிற்கறைகொண்ட கஞ்சனைக் காய்ந்தநிமலன்* நங்கள்
பஞ்சித்திருவடிப் பின்னைதன் காதலன்* பாதம்நண்ணு
வஞ்சர்க்கரிய விராமாநுசன் புகழன்றி யென்வாய்
கொஞ்சிப் பரவகில்லாது* என்னவாழ்வின்று கூடியதே. 28

| | | | |
|---|---|---|---|
| நெஞ்சில் கறை கொண்ட கஞ்சனை | நெஞ்சிலே கல்மஷத்தையுடையனுயிருந்த கம்ஸனை | வஞ்சர்க்கு | ஆத்மாபஹாரக் கள்வர்களுக்கு |
| | | அரிய | துர்லபரான |
| காய்ந்த | முடித்த | இராமாநுசன் | எம்பெருமானருடைய |
| நிமலன் | ஹேயப்ரத்யநீகனுய், | புகழ் அன்றி | குணங்களை யொழிய (மற்றொன்றை) |
| நங்கள் பஞ்சி திருவடி | ஆச்ரிதர் பக்கல் அபிமானமுடையளாய் பஞ்சுபோல் மெல்லிய திருவடிகளையுடையளான | என் வாய் | என் வாக்கானது |
| | | கொஞ்சி பரவ கில்லாது | குலாவி ஏத்தமாட்டாது ; |
| பின்னை தன் காதலன் | நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனுன கண்ணபிரானுடைய | இன்று கூடியது வாழ்வு | இன்று (எனக்கு) நேர்ந்த வாழ்ச்சியானது. |
| பாதம் நண்ணு | திருவடிகளை ஆச்ரயியாத | என்ன | ஆச்சரியமானது ! |

* * *—நேற்றுவரை அபதார்த்தமாய்க் கிடந்த அடியேன் இன்று ஸத்தை பெற்று வாழ்ந்த அதிசயம் சொல்லி முடியுமோ ? இன்று உமக்குவந்த அதிசயம் என்னவென்று கேட்கிறீர்களோ ? எம்பெருமானருடைய குண கீர்த்தநத்தில் நேற்றுவரை உதாஸீநமாய்க் கிடந்த என் வாயானது இன்று அவருடைய திவ்ய

கீர்த்திகளையன்றி வேறொன்றையும் அநுஸந்திக்கமாட்டேனென்று அது தன்னிலே ஊன்றிக் கிடக்கிறதே, இதைவிட அதிசயமுண்டோ? என்கிறார்.

எம்பெருமானார் எப்படிப் பட்டவரென்றால், எம்பெருமானிடத்தில் பக்தியுடையவர்களுக் கன்றி மற்றையோர்க்கு அடைய முடியாதவர்; பகவத் பக்தர்களுக்குப் பரமஸேவ்யர் என்றபடி.

**நெஞ்சில் கறைகொண்ட கஞ்சன்** — தன்னைக் கொல்லப் பிறந்த தேவகீபுத்திரன் யசோதையினிடம் ஒளித்து வளர்தல் முதலிய வரலாறுகளை நாரதன் சொல்லக் கேட்டது முதற்கொண்டு கம்ஸன் கண்ணபிரானிடத்துப் பூர்ணமான மாத்ஸர்யம் பாராட்டிப் பலவகைகளினால் அப்பெருமானை வதைக்க வழிதேடிக்கிடந்தா னென்பதும், கடைசியாக வில்விழா வென்கிற வியாஜம் வைத்துக் கண்ணனை மதுரைக்கு வரவழைத்துக் கொல்லப் பார்க்கையில் கம்ஸ ஸபையிலே கண்ணபிரான் வேகமாக எழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின் மேலேறி அவனது கிரீடம் சுழன்று கீழே விழும்படி அவனைத் தலைமயிர் பிடித்துக் தரையில் தள்ளி அவன்மேல் தான் விழுந்து அவனைக் கொன்றிட்டானென் என்பதும் இங்கு அறியத்தக்கன.

**நங்கள் பஞ்சித்திருவடிப் பின்னைதன் காதலன்** — நமக்குப் புருஷகாரம் செய்வதையே தொழிலாகக் கொண்டவளும் பரம ஸௌகுமாரமான திருவடிகளை யுடையவளுமான நப்பின்னைப் பிராட்டிக்கு நாதன் என்றபடி.

ஆக, கஞ்சனைக்கொன்ற பின்னைமணாளனை திருமால் பக்கல் பக்தியற்ற பாவிகளுக்கு துர்லபரான எம்பெருமானாருடைய புகழையே இன்று வாய்வெருவப் பெற்ற அடியேன் ஒப்பற்ற வாழ்ச்சிபெற்றேனென்றாராயிற்று. ... 28

**கூட்டும் விதியென்று கூடுங்கொலோ?* தென்குருகைப்பிரான்**
**பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ் தன்னைத்* தன்பத்தியென்னும்**
**வீட்டின்கண்வைத்த விராமாநுசன்புகழ் மெய்யுணர்ந்தோ**
**ரீட்டங்கள்தன்னை* என்னாட்டங்கள் கண்டின்ப மெய்திடவே. 29**

| | | | |
|---|---|---|---|
| தென் குருகை பிரான் | நம்மாழ்வாருடைய | மெய் உணர்ந்தோர் | உள்ளபடி அறிந்திருக்குமவர்களுடைய |
| பாட்டு என்னும் | பாசுரங்கள் என்று ப்ரஸித்தமாய் | ஈட்டங்கள் தன்னை | கோஷ்டிகளை |
| வேதம் | வேதரூபமாய் | என் நாட்டங்கள் கண்டு | என் கண்களானவை ஸேவித்து |
| பசும் தமிழ் தன்னை | செந்தமிழாயிருக்கிற திருவாய்மொழியை | இன்பம் எய்திட | ஸுகிக்கும்படியாக |
| தன் பத்தி என்னும் வீட்டின் கண் வைத்த | தம்முடைய பக்தியாகிற மாளிகையிலே ஸ்தாபித்தருளிய | கூட்டும் விதி | அமைக்கவல்ல(அவருடைய) க்ருபையானது |
| இராமாநுசன் புகழ் | எம்பெருமானாருடைய கல்யாண குணங்களை | என்று கூடுங்கொல் | என்றைக்கு வாய்க்குமோ? |

*** — நம்மாழ்வா ரருளிச்செய்த தமிழ் வேதத்தைப் பத்தியுடன் பரவும் எம்பெருமானாருடைய திருக்கல்யாண குணங்களை உள்ளபடி உணர்ந்து ஈடுபட்டிருக்கும் மஹான்களுடைய கோஷ்டிகளை அடியேன் ஸேவித்து ஆநந்திக்கும்படியான பாக்கியம் என்றைக்கு வாய்க்குமோ என்கிறார்.

**கூட்டும் விதி என்று கூடுங்கொல்** — விதியாவது அத்ருஷ்டம்; எம்பெருமானாருடைய திருவருள் தான் இங்கு விதியெனப்படுகின்றதென்க. **கூட்டும் விதி** — என்று கூடியும் இப்பேற்றை நமக்குச் சேர்ப்பதான அவருடைய க்ருபை என்றபடி.

**தன்பத்தி என்னும் வீட்டின்கண் வைத்த** — விலையுயர்ந்த மாணிக்கத்தைச் செப்பிலே வைத்துக்கொண்டிருப்பாரைப்போலே அதர்க்கமான அருளிச்செயலைத் தம்மு

டைய பக்தியாகிற உயர்ந்த மாளிகையிலே வைத்துப் பேணிக்கொண்டிரா நின்ற உடையவர் என்றபடி. நாட்டம்—கண். ... ... ... 29

இன்பந்தரு பெருவீடுவந் தெய்திலென்?* எண்ணிறந்த
துன்பந்தரு நிரயம்பல சூழிலென்?* தொல்லுலகில்
மன்பல்லுயிர்கட் கிறையவன் மாயனென மொழிந்த
அன்பனனகன்* இராமாநுச னென்னை யாண்டனனே. 30

| | | | |
|---|---|---|---|
| தொல் உலகில் | 'அநாதியான இவ்வுலகத்தில் | என்னை ஆண்டனன் | என்னை அடிமைகொண்டருளினார்; (ஆனபின்பு) |
| மன் பல் உயிர்கட்கு இறையவன் மாயன் | நித்யரான எல்லா ஆத்மாக்களுக்கும் சேஷியானவன் விஷ்ணுவே' | இன்பம் தரு பெரு வீடு வந்து எய்தில் என் | ஆநந்தாவஹமான மோக்ஷம் வந்து ஸித்தித்தாலென்ன? |
| என மொழிந்த | என்று (ஸ்ரீபாஷ்ய முகத்தாலே) அருளிச்செய்த | | |
| அன்பன் | பரமகாருணிகராய் | எண் இறந்த துன்பம் தரு பல நிரயம் சூழில் என் | அளவற்ற துக்கங்களைத் தருகிற பல நரகங்கள் வந்து சூழ்ந்து கொண்டால்தான் என்ன? |
| அனகன் | நிர்த்தோஷரான | | |
| இராமாநுசன் | எம்பெருமானார் | | |

***—"இராமாநுசன் புகழ் மெய்யுணர்ந்தோ ரீட்டங்கள் தன்னை என் நாட்டங்கள் கண்டு இன்பமெய்திட—கூட்டும் விதி என்று கூடுங்கொலோ" என்று ஆசம்ஸித்த அமுதனாரை நோக்கிச் சிலர் 'வாரீர்!' இவ்வளவுதானோ உமக்கு வேண்டுவது? இனி பரமபத ப்ராப்தி முதலானவையொன்றும் உமக்கு அபேக்ஷிதமல்லவோ? என்று கேட்க; எம்பெருமானார் என்னை அடிமை கொண்டருளப் பெற்றபின்பு எனக்கு மோக்ஷம் கிடைத்தாலென்ன? பலபல நரகங்கள்தான் நேர்ந்தாலென்ன? எனக்கு எது பரம ப்ராப்யமோ அது கிடைத்துவிட்டது! என்று சரக்கறப் பேசுகிறார்.

நிரயம்—தற்சம வடசொல். அனகன்—வடசொல் விகாரம்: ஹேயப்ரதிபடர் என்றபடி. ... ... ... ... ... ... 30

ஆண்டுகள்நாள் திங்களாய்* நிகழ்காலமெல்லாம் மனமே!
ஈண்டுபல்யோனிகள் தோறுழல்வோம்* இன்றோ ரெண்ணமின்றியே
காண்டகு தோளண்ணல் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப்
பூண்ட வன்பாளன்* இராமாநுசனைப் பொருந்தினமே 31

| | | | |
|---|---|---|---|
| மனமே | நெஞ்சமே!, | இன்று ஓர் எண்ணம் இன்றியே | இன்று ஒரு நினைவுமில்லாதிருக்கச் செய்தே, (அகஸ்மாத்தாக) |
| நாள் ஆய் | நாள்களாகவும் | | |
| திங்கள் ஆய் | மாதங்களாகவும் | | |
| ஆண்டுகள் ஆய் | வருஷங்களாகவும் (இப்படி) | காண் தகு தோள் அண்ணல் தென் அத்தியூரர் கழல் இணைக் கீழ் பூண்ட அன்பு ஆளன் இராமாநுசனை பொருந்தினம் | கண்ணாரக் காணத்தக்க தோள்களையுடைய ஸ்வாமியான பேருளாளனுடைய திருவடிகளில் அன்பு பூண்ட எம்பெருமானாரைச் சேரப்பெற்றோம். (என்ன பாக்கியம்!.) |
| நிகழ் காலம் எல்லாம் | நடந்து செல்லுகிற ஸர்வ காலங்களிலும் | | |
| ஈண்டு பல் யோனிகள் தோறு | திரண்டு பலவகைப்பட்ட யோனிகள் தோறும் | | |
| உழல்வோம் | சுட்டித்திரிந்த நாம், | | |

***—நெஞ்சே! இன்றளவும் நமக்குக் கழிந்த காலங்கள் கணக்கிட முடியா; வருஷக் கணக்காகவும் மாதக்கணக்காகவும் நாட் கணக்காகவும் கழிந்து செல்லுகின்ற காலமெல்லாம் மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து தடுமாறித் திரிந்த நாம் இன்று ஒரு நினைவின்றியே அகஸ்மாத்தாக எம்பெருமானாரை அடிபணியப் பெற்றோமே! நம்முடைய அத்ருஷ்டம் எப்படிப்பட்டது! கண்டாயே! என்று தம் திருவுள்ளத்தோடே உகாவுகினறார்.

ஈண்டு பல் யோனிகள் தோறு—ஈண்டுதல்—திரளுதல்; திரண்டு பலவகைப்பட்ட யோனிகளென்றால்—தனித்தனியே எண்ணி இத்தனையென்று சொல்லமுடியாத வளவன்றிக்கே திரள் திரளாகவும் எண்ணிச் சொல்லமுடியாதபடி பலவகைப்பட்ட யோனிகள் என்றதாகிறது. உழல்வோம்—இறந்தகாலப்பொருள் இங்கு விவக்ஷிதம். இன்றளவும் தட்டித்திரிந்த நாம் என்றபடி. ... ... ... 31

பொருந்தியதேசும் பொறையுந்திறலும் புகழும் * நல்ல
திருந்தியஞானமுஞ் செல்வமுஞ் சேரும் * செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த
அருந்தவன் * எங்க ளிராமாநுசனை யடைபவர்க்கே. 32

| | | | |
|---|---|---|---|
| செறு கலியால் | (தருமநெறியைத் திரஸ்கரிக்கின்ற கலியினாலே | அடைபவர்க்கு | ஆச்ரயிக்கு மவர்களுக்கு |
| வருந்திய | துக்கப்பட்ட | பொருந்திய தேசும் | ஸ்வரூபாநுரூபமானதேஜஸ்ஸும் |
| ஞாலத்தை | பூமியை | பொறையும் | க்ஷமாகுணமும் |
| வண்மையினால் வந்து எடுத்து அளித்த | தமது நிர்ஹேதுக க்ருபையாலே வந்து உத்தரித்து ரக்ஷித்தவரும் | திறலும் | ஜிதேந்த்ரியத்வமாகிற பலமும் |
| | | புகழும் | கீர்த்தியும் |
| அரும் தவன் | சரணாகதி யென்கிற அரிய தபஸ்ஸை அநுஷ்டித்தவரும் | நல்ல திருந்திய ஞானமும் | பரம விலக்ஷணமான அறிவும் |
| எங்கள் | எமக்கு ஸ்வாமியுமான | செல்வமும் | பக்தியாகிற ஸம்பத்தும் |
| இராமாநுசனை | எம்பெருமானாரை | சேரும் | தானே வந்துசேரும். |

***—"இராமாநுசனைப் பொருந்தினமே" என்று அகங்களித்துக் கூறின அமுதனாரை நோக்கிச் சிலர், 'உம்மைப்போலே நாங்களும் இராமாநுசனைப் பொருந்துவோ மென்று பார்த்தால் உமக்குப்போலே எமக்கு ஆத்மகுணலேசமும் இல்லையே! எங்களுக்கு அவரைப்பொருந்த அதிகாரமில்லையே!' என்று சொல்லி வருந்த, அவர்களை நோக்கி அருளிச் செய்கின்றார்—கலிகலுஷ நிவர்த்தகரான நம்மிராமாநுசரை ஆச்ரயிப்பவர்களுக்கு ஸ்வரூபாநுரூபமான மதிப்பும், *களிப்புங் கவர்வு மற்றிருக்கையாகிற க்ஷமாகுணமும், ஜிதேந்த்ரியத்வமாகிற மிடுக்கும், குணசாலிகளென்கிற கீர்த்தியும், தத்வஹித புருஷார்த்தங்களில் தெளிந்த ஞானமும், பக்தியாகிற மஹாஸம்பத்தும் ஆகிய இவை யெல்லாம் தன்னடையே வந்துசேரும் என்றாராயிற்று. ஆகையால் நீங்களும் மயங்காது வந்து ஆச்ரயிக்கலா மென்றவாறு. ... ... ... ... ... 32

அடையார்கமலத் தலர்மகள் கேள்வன் * கையாழியென்னும்
படையோடு நாந்தகமும் படர்தண்டும் * ஒண்சார்ங்கவில்லும்
புடையார் புரிசங்கமு மிந்தப்பூதலம் காப்பதற்கென்று *
இடையே யிராமாநுச முனியாயின விந்நிலத்தே. 33

| | | | |
|---|---|---|---|
| அடை ஆர் கமலத்து அலர் மகள் கேள்வன் | தளங்கள் நெருங்கிய தாமரைப்பூவிற் பிறந்த பெரிய பிராட்டியார்க்கு வல்லபனை எம்பெருமானுடைய | புடை ஆர் புரி சங்கமும் | 'ஒரு பக்கத்துக்குத் தானே ஆபரணமாய்ப் போரும்படியான அழகிய ஸ்ரீபாஞ்சஜந்யமும் (ஆக இப் பஞ்சாயுதாழ்வார்கள்) |
| கை | திருக்கையிலே (விளங்கா நின்ற) | | |
| ஆழி என்னும் படையோடு | திருவாழியென்கிற திவ்யாயுதத்தோடே | இந்த பூதலம் காப்பதற்கு என்று | இந்தப் பூமியை ரக்ஷிக்கைக்காக |
| நாந்தகமும் | நாந்தகவாளும் | | |
| படர் தண்டும் | ரக்ஷணத்தொழிலிலே பரந்திரா நின்ற கதையும் | இந்நிலத்து | இப் பூமண்டலத்திலே |
| ஒண் சார்ங்கம் வில்லும் | அழகிய ஸ்ரீசார்ங்கமென்கிற வில்லும் | இராமாநுச முனி இடையே ஆயின | எம்பெருமானார் பக்கலிலே ஆயினர். |

***—கீழ்ப்பாட்டில், எம்பெருமானாரை ஆச்ரயிக்கவே நற்குணங்களெல்லாம் தன்னடையே வந்து சேரும் என்றார்; அதனைச் செவியேற்ற சிலர்—"ஜிதேந்த்ரியத்வம் முதலான அரிய பெரிய பேறுகள் திருவாழி முதலான திவ்யாயுதங்களின் அநுக்ரஹத்தாலன்றோ உண்டாகவேண்டும்; மநுஷ்யர்களில் ஒருவரான எம்பெருமானாரை ஆச்ரயித்தமாத்திரத்தால் அவை உண்டாய் விடுமோ?" என்று சங்கிக்க, அந்த ஸ்ரீ பஞ்சாயுதாழ்வார்களும் லோகரக்ஷணார்த்தமாக எம்பெருமானார் பக்கலிலே வந்து குடிகொண்டனர் காண்மின்—என்கிறார் இப்பாட்டில்.

"அடையார்கமலத் தலர்மகள்கேள்வன் கையாழி யென்னும் படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்கவில்லும் புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலங் காப்பதற்கென்று இந்நிலத்தே இராமாநுச முனியிடையே ஆயின" என்று அந்வயித்தவாறு. ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்கள் இவர்பக்கலிலே ஆகையாவது இவருடைய நினைவைக் கடாக்ஷித்துநின்று இவர் அதிகரித்த காரியத்திற்குத் துணைசெய்கையாம்; அம்பரீஷனுக்குத் திருவாழியாழ்வான் ஸஹகரித்ததுபோல.

இப்பாட்டை மற்றொருவகையாகவும் அந்வயிக்க இடமுண்டு "அடையார் + புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலங் காப்பதற்கென்று இந்நிலத்திடையே இராமாநுசமுனியாயின" என்று. இப்பக்ஷத்தில் ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்களே இந்நிலவுலகைக் காக்க எம்பெருமானாராக வந்து திருவவதரித்தார்களென்றதாகிறது.

நிலத்தைச் செறுத்துண்ணும் நீசக்கலியை * நினைப்பரிய
பெலத்தைச் செறுத்தும் பிறங்கியதில்லை * என்பெய்வினைதென்
புலத்தில் பொறித்த வப்புத்தகச்சும்மை பொறுக்கியபின்
நலத்தைப் பொறுத்தது * இராமாநுசன்தன் நயப்புகழே .34

| | | | |
|---|---|---|---|
| இராமாநுசன் தன் | எம்பெருமானாருடைய | | (பின்னை எப்போது பிரகாசித்தன? என்னில்;) |
| நயம் புகழ் | கல்யாண குணங்களானவை | என் பெய் வினை | என்னாலே செய்யப்பட்ட பாவங்களை |
| நிலத்தை செறுத்து உண்ணும் நீசம் கலியை | பூலோகத்தை ஹிம்ஸித்துத் தின்கிற நீசனான கலிபுருஷனுடைய | தென் புலத்தில் | யமலோகத்திலே |
| | | பொறித்த | எழுதிவைத்த |
| நினைப்பு அரிய பெலத்தை செறுத்தும் | இவ்வளவென்று நினைக்க முடியாதபடி அளவற்றதான பராக்ரமத்தைத் தொலைத்தவளவிலும் | அப் புத்தகம் சும்மை | அந்தப் புஸ்தகக் கட்டுகளை |
| | | பொறுக்கிய பின் | கொளுத்திவிட்டபின்பு |
| பிறங்கியது இல்லை | பிரகாசிக்கவில்லை; | நலத்தை பொறுத்தது | விளக்கம் பெற்றன. |

| | | | |
|---|---|---|---|
| அடை ஆர் கமலத்து அலர் மகள் கேள்வன் | தளங்கள் நெருங்கிய தாமரைப்பூவிற் பிறந்த பெரிய பிராட்டியார்க்கு வல்லபனான எம்பெருமானுடைய | புடை ஆர் புரி சங்கமும் | 'ஒரு பக்கத்துக்குத் தானே ஆபரணமாய்ப் போரும்படியான அழகிய ஸ்ரீபாஞ்சஜந்யமும் (ஆக இப்பஞ்சாயுதாழ்வார்கள்) |
| கை | திருக்கையிலே (விளங்காநின்ற) | | |
| ஆழி என்னும் படையோடு | திருவாழியென்கிற திவ்யாயுதத்தோடே | இந்த பூதலம் காப்பதற்கு என்று | இந்தப் பூமியை ரக்ஷிக்கைக்காக |
| நாந்தகமும் | நாந்தகவாளும் | | |
| படர் தண்டும் | ரக்ஷணத்தொழிலிலே பரந்திரா நின்ற கதையும் | இந்நிலத்து | இப் பூமண்டலத்திலே |
| ஒண் சார்ங்கம் வில்லும் | அழகிய ஸ்ரீசார்ங்கமென்கிற வில்லும் | இராமாநுச முனி இடையே ஆயின | எம்பெருமானார் பக்கலிலே ஆயினர். |

***—கீழ்ப்பாட்டில், எம்பெருமானாரை ஆச்ரயிக்கவே நற்குணங்களெல்லாம் தன்னடையே வந்து சேரும் என்றார்; அதனைச் செவியேற்ற சிலர்—"ஜிதேந்த்ரியத்வம் முதலான அரிய பெரிய பேறுகள் திருவாழி முதலான திவ்யாயுதங்களின் அநுக்ரஹத்தாலன்றோ உண்டாகவேண்டும்; மநுஷ்யர்களில் ஒருவரான எம்பெருமானாரை ஆச்ரயித்தமாத்திரத்தால் அவை உண்டாய் விடுமோ?" என்று சங்கிக்க, அந்த ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்களும் லோகரக்ஷணார்த்தமாக எம்பெருமானார் பக்கலிலே வந்து குடிகொண்டனர் காண்மின்—என்கிறார் இப்பாட்டில்.

"அடையார்கமலத் தலர்மகள்கேள்வன் கையாழி யென்னும் படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்கவில்லும் புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலங் காப்பதற்கென்று இந்நிலத்தே இராமாநுச முனியிடையே ஆயின" என்று அந்வயித்தவாறு. ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்கள் இவர்பக்கலிலே ஆகையாவது இவருடைய நினைவைக் கடாக்ஷித்துநின்று இவர் அதிகரித்த காரியத்திற்குத் துணை செய்கையாம்; அம்பரீஷனுக்குத் திருவாழியாழ்வான் ஸஹகரித்ததுபோல.

இப்பாட்டை மற்றொருவகையாகவும் அந்வயிக்க இடமுண்டு "அடையார்+புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலங் காப்பதற்கென்று இந்நிலத்திடையே இராமாநுசமுனியாயின" என்று. இப்பக்ஷத்தில் ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்களே இந்நிலவுலகைக் காக்க எம்பெருமானாராக வந்து திருவவதரித்தார்களென்றதாகிறது.

நிலத்தைச் செறுத்துண்ணும் நீசக்கலியை * நினைப்பரிய
பெலத்தைச் செறுத்தும் பிறங்கியதில்லை * என்பெய்வினைதென்
புலத்தில் பொறித்த வப்புத்தகச்சும்மை பொறுக்கியபின்
நலத்தைப் பொறுத்தது * இராமாநுசன்தன் நயப்புகழே 34

| | | | |
|---|---|---|---|
| இராமாநுசன் தன் | எம்பெருமானாருடைய | | (பின்னை எப்போது பிரகாசித்தன? என்னில்;) |
| நயம் புகழ் | கல்யாண குணங்களானவை | என் பெய் வினை | என்னாலே செய்யப்பட்ட பாவங்களை |
| நிலத்தை செறுத்து உண்ணும் நீசம் கலியை | பூலோகத்தை ஹிம்ஸித்துத் தின்கிற நீசனான கலி புருஷனுடைய | தென் புலத்தில் | யமலோகத்திலே |
| | | பொறித்த | எழுதிவைத்த |
| நினைப்பு அரிய பெலத்தை செறுத்தும் | இவ்வளவென்று நினைக்க முடியாதபடி அளவற்றதான பராக்ரமத்தைத் தொலைத்தவளவிலும் | அப் புத்தகம் சும்மை | அந்தப் புஸ்தகக் கட்டுகளை |
| | | பொறுக்கிய பின் | கொளுத்திவிட்டபின்பு |
| பிறங்கியது இல்லை | பிரகாசிக்கவில்லை; | நலத்தை பொறுத்தது | விளக்கம் பெற்றன.

ரிஜிஸ்டர் நெ. 2975 ஸ்ரீ ராமாநுஜன்

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
4. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
3. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்கள்
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விலரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்
P. B. ANNANGARACHARYA,.
*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக.



If un-delivered please return to :
P. B. ANNANGARACHARYA,
KANCHIPURAM. Pin Code-631503



To
Sriman / Srimathi

Vidwan K. Krishn[illegible]engar,
15, Selvan Street,
P.O. Nanguneri (Tirunelveli Dt.



Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by E. Devarajan at Sri Kamakshi Press. 44-C. T. K. Nambi St.,
Kancheepuram-3.

ரிஜிஸ்டர் நெ. 2975 ஸ்ரீ ராமாநுஜன்

P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
4. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
3. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்கள்
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்
P. B. ANNANGARACHARYA,
*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to :
P. B. ANNANGARACHARYA,
KANCHIPURAM. Pin Code-631503

To
Sriman / Srimathi

Vidwan K. Krishn[illegible]engar,
15, Selvan Stree.,
P.O. Nanguneri (Tirunelveli Dt.



Released by Maran's Dog ,Toronto, Canada

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by E. Devarajan at Sri Kamakshi Press. 44-C. T. K. Nambi St.,
Kancheepuram-3.